# கல்கி

KALKI 16.5.2004
ரூ.6.00

## சூப்பர் ஸ்டார் சூர்யா!

இணைப்பு:

துளி துளி உயிர்த் துளி! மினி கல்கி





ஹலோ! 'நாமும் மற்றவரைப் போல கார் மற்றும் டூ-வீலர் ஓட்ட வேண்டும், எங்கு கற்பது? யாரிடம் கேட்பது? காஸ்ட்லியாக இருக்குமோ?' என்ற எண்ணம் நம்மிடையே பலருக்கு இருப்பது உண்மைதானே? ஏன் இந்த கூச்சம், தயக்கம்? உங்களுக்காகவே, ஆண், பெண் இருபாலருக்கும் தனித்தனியாக கார் மற்றும் ஸ்கூட்டி, கைனடிக் ஹோண்டா ஆகியவற்றில் டிரைவிங் கற்றுக் கொள்ள மேலும் தாமதிக்காமல் உடனே எங்களை அணுகவும். கோடை விடுமுறையில் ஒரு பயனுள்ள பயிற்சி உங்களுக்காகவே!

**ஹலோ! ஒரு நிமிடம்! நீங்களும் டிரைவிங் கற்கலாமே!**



டீன்ஏஜ் முதல் 50 வயது வரை. **சான்ட்ரோ, மாருதி,** ஸ்கூட்டி, கைனடிக் ஹோண்டா இவைகள் பெண்களுக்கு மட்டுமல்ல. ஆண்களுக்கும் மிக எளிதாக விரைவில் பயிற்றுவிக்கப்படுகிறது.

இதோ வள்ளி டிரைவிங் ஸ்கூல் உரிமையாளர் திருமதி வள்ளி அவர்களுடன் ஒரு சிறு உரையாடல்:

**நீங்கள் விரைவாக எளிதாகப் பாதுகாப்பாக வாகனங்களை இயக்க கற்றுக் கொடுப்பது எப்படி?**

"முதல் நாள் அவர்களுக்கு மனப்பயிற்சி கொடுப்போம். அதன் மூலம் தன்னம்பிக்கை, உடல் வலு, புரிந்து கொள்ளும் தன்மை அதிகப்படும். பிறகு அவர்கள் இயக்க விரும்பும் வாகனம் பற்றி விளக்குகிறோம். அடுத்ததுதான் அவர்களுக்கு வாகனம் இயக்கக் கற்றுத் தருகிறோம். அவர்களின் மனதைப் பக்குவப்படுத்தி விடுவதால் எளிதாகப் புரிந்து சில நாட்களிலேயே கற்றுக் கொள்கிறார்கள்" என்கிறார்கள் திருமதி. வள்ளியும் அவரது கணவர் திரு. வள்ளியப்பனும்.

கணவன் – மனைவி இருவரும் ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? கார் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? நீங்கள் உடனே தயங்காமல் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி

# வள்ளி டிரைவிங் ஸ்கூல்

(அரசு அங்கீகாரம் பெற்றது)



புது எண். 13 (ப.எண்.7) தண்டபாணி தெரு,
தி. நகர், சென்னை - 17.
(பனகல் பார்க் அருகில்,வெங்கட்நாராயணா ரோடு எதிரில்; வேளாங்கன்னி பள்ளி அருகில்)
Ph. Off : 24364815, 52126780 Res : 24842466
செல் : 9840043648, 31023273

அலுவலக நேரம் :
காலை 7.00 மணி முதல் மாலை 7.00 மணி

குறிப்பு : பெண்களுக்குக் கற்றுத்தர பெண் பயிற்சியாளர்கள் உண்டு.

## உள்ளே...




















# கல்கி

16.5.2004

# வட்டமேஜை




✉ 'தண்ணீர், கண்ணீர்!' தலையங்கம் படித்தேன். சென்னை நகருக்குத் தண்ணீர்த் தேவையைப் பூர்த்தி செய்ய, வீராணம் ஏரியிலும், பாலாற்றுப் படுகையிலும் ஆழ்துளைக் கிணறு மூலம் தண்ணீர் இறைக்கப்படுவது, திறமையற்ற ஆட்சியின் அலங்கோல அடையாளம் என்று சொல்லலாம். இப்பகுதி விவசாயிகளின் எதிர்கால நிலைமையை நினைத்தால் கண்களில் நீர் வழிகிறது. ஆயிரம் கி.மீ. நீளமுள்ள கடற்கரை நமக்குச் சொந்தமாக இருக்கும்போது நமக்கு ஏன் கவலை? இதுவரை தண்ணீருக்காக அரசு செலவிட்ட தொகையைக் கொண்டு, கடல்நீரைக் குடிநீராக்கும் திட்டத்தை வெற்றிபெறச் செய்திருக்கலாம்.

மொரட்டுப்பாளையம்,
இரா.வி.சௌந்தர்யா விசாலினி

✉ திறமையும், அழகுங்கொண்ட சௌந்தர்யா அநியாயமாக அரசியலின் கோரப்பசிக்கு இரையானது கண்டு, இதயம் அழுதுகொண்டே இருக்கிறது.

திருச்சி, பறம்பை இரா.சு. பிரகாசம்

✉ 'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா பிற்பகல் தாமே வரும்' என்ற குறட் கருத்தைப் புலப்படுத்தும் போஸ்ட் கார்டு - 'சொன்ன சொல்!' - கதை சிறுத்திருப்பினும், காரம் குறையாத கடுகு!

கு. கழுகாசலபுரம், எஸ்.ஏ.கேசவன்

✉ வாக்கு இயந்திர வேதாளம் சொன்ன கதையும்... அந்தப் புதிர்க் கதைக்கு வாக்காளன் தந்த தெளிவான பதிலும் புன்னகைச் சிந்தனை தந்தது.

திருவண்ணாமலை, எல்.எம்.மங்கை

✉ கருணாஸின் கலக்கல் சர்வே, சும்மா சொல்லக் கூடாது 'செம ஜாலி' தலைவா!

மதுரை, பி.ராஜசேகரன்

✉ வைகோவின் பேட்டியில் பழைய சப்பைக்கட்டுப் பதில்களையே இப்பொழுதும் சொல்கிறார். தி.மு.க.வுடனான 'உறவு' எத்தகையது என்பதற்கு, தெளிவான பதில் இல்லாமல் குழப்புகிற பதிலையே தந்திருக்கிறார்.

திருப்பூர், பா.சு.மணிவண்ணன்

✉ 'ஓவரா பேசினா குத்து' என்ற தலைப்





பில் சிம்பு, விஜய், அஜீத், விஜய்காந்த் ஆகியோரின் வாய்ஸ் பற்றிய கற்பனை அருமை.
மணியக்காரன்பாளையம், ஏ.ஜி.கல்யாணசுந்தரம்

✉ பல்வேறு வித்தியாசமான, புதுவகையான தலைப்புகளில், பல பயனுள்ள செய்திகளை 'மினி கல்கி'யின் மூலம், வாரா வாரம் தந்து, வாசகர்களை வசப்படுத்தி, தொடர்ந்து கலக்கிக் கொண்டே வருகிறீர்கள்.
வேலூர், வே.ந.கதிர்வேல்

✉ 'கில்லி'யை எல்லோரும் எகிறி விமர்சனம் செய்து வருகையில், தவறுகளைச் சுட்டிக் காட்டிய தங்களது அடக்கமான விமர்சனம், அட்டகாசம்!
பொன்மலை, ஆர்.பிரகாஷ்

✉ அமேதி தொகுதி மட்டுமா குண்டும் குழியுமாய்க் கிடக்கிறது? ஆளுங்கட்சிக்கு எதிராய் வெற்றி கண்ட வேட்பாளரின் தொகுதிகளே பெரும்பாலும் கேட்பாரற்று தான் கிடக்கின்றன. முந்தைய அரசு கொண்டு வந்த திட்டங்களை, பிந்தைய அரசு கண்டு கொள்ளாத போக்கு எந்த மாநிலத்தில்தான் இல்லை?
லால்குடி, ஆங்கரை பைரவி

✉ அட்டைப் படத்தில் காணப்பட்ட ராகுல் காந்தியின் படம் அட்ராக்டிவ் ஆக இருந்தது. அசப்பில் ராஜீவ் முகமாகவே தெரிந்தது. இந்திராகாந்தியின் நகலாக ப்ரியங்காவையும், ராஜீவின் குளோனிங்காக ராகுலையும் பெற்றெடுத்த சோனியா காந்தி, முழுக்க முழுக்க இந்தியத் தாயாகவே தெரிகிறார்.
ஆடுதுறை, ஜி.ராமதாஸ்

✉ பாலாஜியின் பேட்டி படித்தேன். தமிழகத்திலிருந்து இந்திய அணியில் பங்கேற்று, பாதியில் காணாமல் போய்விடுபவர்களைவிட பாலாஜி ஜொலிப்பார் என்று நம்புகிறேன்.
கும்பகோணம், கே.என்.பாலகிருஷ்ணன்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# ஜேம்ஸ் பாண்ட் கமல்!



**"ஒரு ரசிகன் என்ன மாதிரி படத்தைப் பார்க்க வேண்டும் என்று ஓர் இயக்குனரோ, தயாரிப்பாளரோ ஏன் முடிவு செய்யக் கூடாது?"**

"முதன் முதலில் சலனப்படம் எடுத்தவர்கள் லூமியே சகோதரர்கள். ஒரு பிளாட்பாரத்தில் ரயில் வந்து நிற்கிற காட்சியை அவர்கள் படம் பிடித்திருந்தார்கள். அந்தப் படத்தைத் திரையிட்ட போது, படம் பார்த்துக் கொண்டிருந்தவர்கள், நிஜமாகவே அவர்கள் மீது மோதுகிறாற் போல ரயில் வருகிறதோ என்று பயந்து, எழுந்து ஓட ஆரம்பித்து விட்டனர். இதுதான், அன்று மக்கள் மீது சினிமா ஏற்படுத்திய பாதிப்பு. இன்றும் அதே நிலைமைதான். தியேட்டரில் உட்கார்ந்து படம் பார்க்க முடியாமல் ரசிகர்கள் ஓடுகிறார்கள்" என்று ஜாலியாக கமலஹாசன் சொன்னபோது, அரங்கில் இருந்தவர்கள் கைதட்டி ரசித்தனர்.

திருவல்லிக்கேணி கல்சுரல் அகாடமி, தன் பொன் விழாவை ஒட்டி ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சியில் பத்மா சுப்ரமண்யம் தலைமைதாங்க, கமலஹாசன் சிறப்புரை யாற்ற வந்திருந்தார். தலைப்பு : சமூகத்தின் மீது சினிமாவின் பாதிப்பு. கலகலப்பாக ஆரம்பித்தாலும், கமல் அதன் பிறகு சீரியஸாகவே பேசினார்:

"சினிமா, உங்கள் மீது ஏற்படுத்தும் பாதிப்பை விட்டுத் தள்ளுங்கள். கெட்ட சினிமா எடுப்பவர்கள் மீது நீங்கள் பாதிப்பு ஏற்படுத்துங்கள் நல்ல சினிமா வருகிற போது, ஆதரித்தால் மட்டும் போதாது. கெட்ட சினிமா






• விழாவில் பத்மா சுப்ரமண்யம், கல்சுரல் அகாடமியின் தலைவருடன் கமல்

வருகிற போது, நீங்கள் உங்கள் எதிர்ப்பையும் தெரிவிக்கத் தவறக் கூடாது.

"இன்று சாந்தாராம் போன்ற இயக்குனர்கள் இல்லை என்பது பெரிய குறை. பொழுதுபோக்குதானே என்பதற்காக, அவர்கள் எதை வேண்டுமானாலும் சினிமாவில் காட்டுவதற்குத் தயாராக இல்லை. சத்யஜித்ரே நினைத்திருந்தால், ஆஸ்கர் விருது வாங்காமலேயே பெரிய பங்களா, ஏராளமான வசதிகளுடன் வாழ்ந்திருக்கலாம். ஆஸ்கர் விருது வாங்கிக் கொண்டு, சாதாரண வீட்டில் செத்திருக்க வேண்டிய அவசியமில்லை.

"பராசக்தி, வேலைக்காரி போன்ற படங்கள் மாறுபட்ட கொள்கையைச் சொன்ன போது, சமூகத்தில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தின என்பது வரலாறு.

"எம்.ஜி.ஆர். படங்களில் யதார்த்தம் இல்லாமலிருந்திருக்கலாம். ஆனால், வர்த்தக சாதுரியம் இருந்த அதே நேரத்தில், சமூகப் பொறுப்புணர்வு இருந்ததையும் மறுக்க முடியாது. டைரக்டரும், தயாரிப்பாளரும் வெளிப்படையாக மறுக்க முடியாமல், முகஞ்சுளித்தபோதும், கண்டிப்பாக ஒரு பாரதிதாசன் பாட்டு படத்தில் வேண்டும் என்று சொல்லி, பாரதிதாசனின் 'சித்திரச் சோலைகளே' பாடலை எம்.ஜி.ஆர். படத்தில் சேர்த்ததை, நான் அருகில் இருந்து பார்த்தவன்.

"அற்புதமான கலைப் படங்களை எடுத்துப் பெயர் பெற்ற ஜி.வி.ஐயர், வர்த்தகப்படங்கள் எடுத்துச் சலித்து, கலைப் படங்களின் பக்கம் போனவர். அவர் என்னை 'ஆர்ட் சினிமா ஜேம்ஸ் பாண்டு' என்று குறிப்பிடுவார். 'ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள் என்று அவரிடமே கேட்ட போது, நீ ஆர்ட் சினிமா ஆள்!' ரகசியமாய் வர்த்தக சினிமாவுக்குள் அனுப்பப்பட்டிருக்கிற ஒற்றன். அங்கே தப்பு செய்பவர்களைக் கண்டறிந்து, சரிசெய்யும் பொறுப்பு உனக்கு இருக்கிறது" என்பார்.

"உனக்கு என்ன மாதிரி துணி அணிய விருப்பம் என்று இளைஞர்களிடம் கேட்டுத்தான் புதிய டிசைன்களை உருவாக்குகிறீர்களா?' என்று ஒரு தடவை ரேமண்ட் நிறுவனத் தலைவரிடம் கேட்டேன். அவர், 'அதை நான் முடிவு செய்து, அவர்களிடம் விற்கிறேன்' என்றார்.

"ஒரு மனிதன் என்ன சட்டை அணிய வேண்டும் என்பதை ஒரு மில் முதலாளி முடிவு செய்கிற போது, ஒரு ரசிகன் என்ன மாதிரி படத்தைப் பார்க்க வேண்டும் என்று ஒரு இயக்குனரோ, தயாரிப்பாளரோ ஏன் முடிவு செய்யக் கூடாது? மக்கள் இதைத்தான் விரும்புகிறார்கள் என்று சொல்லி ஏன் படம் எடுக்க வேண்டும்? மக்களிடம் உங்களுக்குப் பிடிக்குமா? என்று கேட்டுக் கொண்டா காளிதாஸர் சாகுந்தலம் எழுதினார்?"

**- எஸ். சந்திரமௌலி**

# அஞ்சல் வழியில் ஹிந்தியில் பேசக் கற்போம், இமயத்தை வெல்வோம்!



ஒரு புதிய மொழியை எவ்வளவு நாட்களில் கற்கலாம்? தேவையான, அன்றாட வாழ்க்கைக்கு பயன்படும் சொற்களை ஒரே வாரத்தில் கற்கலாம். கடைக்குச் சென்று பேரம் பேசி பொருட்களை வாங்க வேண்டிய அளவிற்கு தேவையான சொற்களைக் கற்க வேண்டுமானால், ஒரு மாதத்தில் கற்கலாம். எழுதவும், படிக்கவும், சரளமாகப் பேசவும் கற்க வேண்டுமானால், சற்று முயன்றால் ஆறே மாதத்தில் கற்கலாம். அம்மொழி பேசும் மாநிலத்தில் இருந்தால் ஒரே மாதத்தில் மிகச் சரளமாக பேச கற்றுவிடலாம்.

சரி, பல மொழிகளைக் கற்பது அவசியமா? 'ஆம்' நிச்சயமாக அவசியம். எவ்வளவு மொழிகள் கற்கிறோமோ, அந்த அளவு மனம் விரிவடைகிறது. ஒரு மொழி என்பது வெறும் எழுத்துக்களும், உச்சரிப்புகளும் மட்டும் அல்ல. இவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்ட இதயத் துடிப்பு, ஒவ்வொரு மொழியின் சொற்களிலும் அடங்கியுள்ளது. எவ்வளவு மொழிகளைக் கற்கிறோமோ, அவ்வளவு மொழி பேசுபவர்களின் இதயத்துடிப்பை எளிதில் அறிய முடியும். நம் வாழ்க்கை சுலபமானதாகும்.

மற்றவர்களின் மனதை வசப்படுத்த மிக எளிய மற்றும் சக்தி வாய்ந்த ஆயுதம் மொழியாகும். அது மட்டுமல்ல, நம் திறமைகளை மற்றவர்கள் பேசும் மொழியின் துணை கொண்டு வெளிப்படுத்தும்போது அதனால் கிடைக்கும் பயன்களை சொல்லி மாளாது.

சரி, மற்ற மொழிகளைக் கற்பது என்று தீர்மானித்த பின், முதலில் எந்த மொழியைக் கற்கலாம்?

இந்தியாவில் 90% சதவீதத்திற்கும் மேற்பட்டவர்கள் ஹிந்தியில் சரளமாகப் பேசுகிறார்கள். எனவே இந்தியாவின் பல இடங்களுக்கும் செல்ல வேண்டும் என்று நினைப்பவர்களும், பல துறைகளில் வெல்ல வேண்டும் என்று நினைப்பவர்களும் ஹிந்தியை நிச்சயமாகக் கற்க வேண்டும். 29.05.2003 அன்று தினமணியில் 'இந்தி தெரியாததால் ஏற்படும் இழப்பு' என்று வெளியான திரு. ந. தமிழ்க் காவலன் என்பவரின் கடிதத்தைப் படித்தால் ஹிந்தி மொழி படிப்பது எவ்வளவு அவசியம் என்பது புரியும். அக்கடிதத்தின் ஒரு பகுதியை இங்கு கொடுத்துள்ளோம். 'என்.சி.சி டைரக்டர் ஜெனரல்' விருது பெற்ற எஸ். பார்த்திபன் சாதனையை (21.04.2004) விளக்கியிருந்தீர்கள்.

'இந்தி தெரியாத காரணத்தினால் தமிழக இளைஞர்களின் பதக்கம் மற்றும் பாராட்டுச் சான்றுகள் பறி போகின்றன என்று பார்த்திபன் கூறியிருந்தது 100 சதவீதம் உண்மை. அனைத்து வகையான தேர்வுகளிலும் முன்னணியில் இருந்தாலும், மொழி தெரியாத காரணத்தினால் எதையும் உடனே தெரிந்து கொள்ளவோ அறிந்து கொள்ளவோ முடிவதில்லை'

இது மட்டுமல்ல, எந்த ஒரு துறையிலுமே, அகில இந்திய அளவில் முதல் நிலையில் இருப்பதற்கு ஹிந்தி மொழி அறிந்திருப்பது மிகவும் அத்தியாவசியமாக உள்ளது. செப்டம்பர் 2003ல் நடைபெற்ற ஆட்சி மொழி மாத நிறைவு நாள் விழாவில் பேசிய ஒருவர், "நான் ஹிந்தி மட்டும் பேசக் கற்றுக் கொண்டிருந்தேன் என்றால், என் தமிழ்நாட்டில் உள்ள ஒவ்வொருவரின் இதயத் துடிப்பையும் தில்லியில் ஒலிக்கச் செய்திருப்பேன். ஹிந்தி கற்காததை நினைத்து வருந்துகிறேன்' என்று கூறினார்.

இப்படிப்பட்ட மனத்தாங்கல் நம்மில் பலருக்கு உள்ளது. எல்லையற்ற திறமைகளைக் கொண்டிருந்தும் அகில இந்திய அளவில் முதலிடத்தில் வர முடியாமல் இருப்பதற்கு, முக்கியமான காரணங்களில் -ஒன்று ஹிந்தி மொழியில் சரளமாகப் பேச முடியாததே ஆகும். ஹிந்தி மொழி மிகவும் சுலபமான மொழி. இதைக் கற்பதும், சரளமாகப் பேசுவதும் மிக எளிது. ஹிந்தியும் தமிழும் சம்பந்தமே இல்லாத இரு வேறு மொழிகள் என நம்மில் பலர் நினைக்கின்றோம். ஆனால் இது ஒரு தவறான அபிப்ராயமாகும். தமிழில் பயன்படுத்தப்படும் 5000க்கும் மேற்பட்ட சொற்கள் ஹிந்தியிலும் பயன்படுத்தப்படுகின்றன. எனவே தமிழ் மொழி அறிந்தவர்கள் ஹிந்தி மொழியைக் கற்பது மிகவும் சுலபம்.

இம் மையத்தின் தலைவரும், பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கத்தின் பொதுச் செயலாளரும், SBOA பள்ளிகளின் தாளாளருமான (Correspondent) மான திரு. K.பார்த்தசாரதி இப்பயிற்சி பற்றி விபரங்களைக் கூறினார்.

## DIPLOMA IN CONVERSATIONAL HINDI
### (பேச்சு மொழி இந்தி டிப்ளமோ பயிற்சிக்கான விபரங்கள்)

1. இப் பயிற்சியில் மொழி ஆர்வமுடைய எவரும் சேரலாம் (பள்ளிச் சிறுவர் முதல் ரிடையர் ஆனவர் வரை)
2. இது ஆங்கிலம் மூலமாகவும் தமிழ் மூலமாகவும் நடத்தப்படுகிறது.

3. அஞ்சல் வழியில் நடத்தப்படுவதால் எங்கிருந்தபடியும் சுலபமாகப் படிக்கலாம்.

4. 'இரு வழித் தொடர்பு' (TWO WAY COMMUNICATION) இப் பயிற்சியில் சிறப்பு அம்சமாகும். அதாவது ஒவ்வொரு மாதமும் முதல் வாரத்தில் பாடங்கள் கூரியர்/Post மூலம் அனுப்பப்படும். ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் பயிற்சிகள் இருக்கும். இப் பயிற்சிகளைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். இவற்றைத் திருத்தி, பயில்பவர்களுக்குத் திருப்பி அனுப்பி வைக்கப்படும்.

5. ஒவ்வொரு மாதமும் (இறுதி ஞாயிற்றுக் கிழமையில்) ஒரு நேர்முக வகுப்பு நடத்தப்படுகின்றது. இவ் வகுப்புகளில் அந்த மாதம் அனுப்பிய பாடங்கள் விளக்கப்படுவதுடன் இந்தி மொழியில் உரையாட (மதிய உணவுடன்) பயிற்சியும் அளிக்கப்படுகின்றது.

6. நேர்முக வகுப்புகளுக்கு வர முடியாதவர்களுக்கு உதவியாக (மொழி விளக்க மேம்பாட்டு மையங்கள்) திருச்சி, கோவை, மதுரை, தில்லி, ஹைதராபாத், மும்பை, ராஜஸ்தான் போன்ற இடங்களில் உள்ளன. தவிர 15 பேர்களுக்கு அதிகமாக எண்ணிக்கையில் மாணவர்கள் உள்ள இடங்களில் மொழி விளக்க நிபுணர்கள் (Resource persons) ஏற்பாடு செய்யப்படுகின்றனர்.

7. அகர உச்சரிப்பிலிருந்து பலவகை சூழ்நிலைகளில் பேசும் பயிற்சிகளைக் கொண்ட இரட்டை ஒலி நாடாக்கள் (TWIN CASSETTES) வெளியிடப் பட்டுள்ளன. இவற்றுடன் வழங்கப்படும் துணை நூலைப் படித்த வண்ணம், ஒலிநாடாக்களைக் கேட்டால் மிக விரைவில் மொழியைக் கற்றுக் கொள்ளலாம். இந்த ஒலி நாடாக்களைப் பெற விரும்புகிறவர்கள் ரூ.150/-க்கான டிமாண்ட் டிராப்ட் SBIOA INSITITUTE, CHENNAI என்ற பெயரில் எடுத்து தனியாக அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

8. பயிற்சியில் தேறியவர்களுக்கு வருடா வருடம் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் 'DIPLOMA IN COVERSATIONAL HINDI' சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. இப் பட்டமளிப்பு விழாவில் இதுவரை ஆற்காடு இளவரசர், முன்னாள் பிரதமர் சந்திரசேகர், பாரத ரத்னா, சி. சுப்ரமணியம், டாக்டர் கிரண்பேடி ஐ.பி.எஸ், பாரத ஸ்டேட் வங்கியின் தலைமைப் பொது மேலாளர் திரு. R.C. ஷர்மா, அருட்செல்வர் DR.N மஹாலிங்கம், திரு. எஸ். குருமூர்த்தி Chartered Accountant and Eminent Columinist போன்றவர்கள் முக்கிய விருந்தினராக உரை நிகழ்த்தியுள்ளனர்.

9. பயிற்சிக் காலம் ஆறு மாதம் (ஜனவரி முதல் ஜூன் வரை ஜூலை முதல் டிசம்பர்




** Dr. S. Vijaya, Course Director,*
*Sri M.K. Chataurvedi G.M.IOB, D.S. Rishabadas, Director,*
*Sri K. Parthasarathy Executive Director,*
*Sri S. Krishnamurthy G.M.SBI,*
*Sri. S Gurumurthy CA, Leading Coloumnist,*
*Sri M. Dharmarajan, Sri. S. Subbiah, Finance Director,*
*Dr. S. Subramanian (From left to right)*

வரை) அடுத்த வகுப்பு ஜூலை 2004ல் துவங்க உள்ளது.

10. பயிற்சிக் கட்டணம் ரூ. 600/- (ரூபாய் அறுநூறு மட்டுமே) (நேர்முகப் பயிற்சி தேர்வுக்கட்டணம் உட்பட)

ஜூலை 2004ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள் ரூ.100க்கான டிமாண்ட் டிராப்ட் அல்லது உள்ளூர் காசோலை SBIOA INSTITUTE, CHENNAI என்ற பெயரில் எடுத்து சுய விலாசமிட்ட, தபால் தலையுடன் (ரூ.10) கூடிய உறையுடன் கீழ்கண்ட முகவரிக்கு எழுதவும். உறையின் மேல் English Medium/Tamil Medium என்ற பயிற்சி மொழியைக் குறிப்பிடவும் (இந்த ரூ.100/-க்கான பயிற்சிக் கட்டணத்திலிருந்து கழித்துக் கொள்ளப்படும்.)

**The Executive Driector,**
**SBIOA Institute**
**229, N.S.C. Bose Road, P.B.No. 1279,**
**Chennai 600 001**
**Phone: 044- 25340226**

ADVT

நாடு முன்னேற திட்டங்களுடன் நாங்க ரெடி; நீங்க ரெடியா?... - கேட்கிறது இளைய தலைமுறை

**தீபா (எம்.காம்):**
சிறு தொழிற்சாலைக்கு வேண்டிய அடிப்படைக் கட்டுமானத் தளங்களை உருவாக்கித் தந்தால் போதும். சுய தொழில் செய்ய முன் வருவோருக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுக்கணும். தேசிய வங்கிகள் உள்ளிட்ட பல நிதி நிறுவனங்கள் 'நாங்கள் உதவுகிறோம்' என்று விளம்பரங்களைத் தான் பிரமாதமாக வெளியிடுகின்றன. ஆனால் நேரிடையாக அணுகும் போது தான், பல நடைமுறைச் சிக்கல்கள். இதன் காரணமாக, பல இளைஞர்கள் வெறுத்துப் போய் முயற்சிகளையே கைவிட்டு விடுகிறார்கள். படித்த இளைஞனுடைய பட்டப் படிப்பு சான்றிதழையே பிணையாக வைத்துக் கொண்டு நிதி கொடுக்கணும். இரண்டு வருட காலம் அவன் தொழில் பளிச்சிடும் வரை, கடன் தொகை கேட்கக் கூடாது. விவசாயிகளுக்குக் கொடுப்பது போல இலவச மின்சாரம் இல்லாவிட்டாலும், குறைந்த பட்சம் சலுகை மின்சாரம் வழங்க வேண்டும். இப்படியெல்லாம் புதிய பிரதமர் முயற்சி செய்து பார்க்கட்டும். அப்புறம் பாருங்கள். குண்டூசி முதற் கொண்டு சாட்டிலைட் உபகரணங்கள் வரை, உற்பத்தியில் இந்தியா சக்கைப் போடு போடும்.


• ராகவ் பிரசாந்த்


• நித்யா


• தீபா


• அநிருத் ரவி

**உத்ரா (கம்ப்யூட்டர் சயின்ஸ், மூன்றாம் வருடம், எஸ்.ஆர்.எம். பொறியியல் கல்லூரி):**
முதலில் நாம் உலகத் தரத்துக்கு இணையான, கல்வி கொடுக்கவேண்டும். அமெரிக்கத் தரத்துக்கு இணையாக, இங்கு கல்வியும் வேலை வாய்ப்பும் கொடுத்தால், வெளிநாடு போக முயற்சி செய்யும் இளைஞர்களின் எண்ணிக்கை கணிசமாகக் குறையுமே! இங்கே பத்து வருடத்துக்கு முந்தைய பாடத்திட்டத்தைத் தான் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அங்கே இன்றைய அறிவியல், பொறியியல், முன்னேற்றங்களைக் கணக்கெடுத்து, பாடத் திட்டங்கள் இயற்றப்படுகின்றன. இப்படி கல்வியின் தரத்தை உயர்த்தினால் இங்கேயே படித்து விட்டு, நாட்டுக்காக உழைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இங்கேயே செட்டிலாகும் இளைஞர்களின் எண்ணிக்கை கூடும். எங்களுக்கு வேண்டிய உற்சாகத்தையும், ஊக்கத்தையும் கொடுங்கள். நாட்டின் ஒட்டு மொத்த முன்னேற்றத்துக்கு எங்கள் உயிரைக் கொடுப்போம்.

**ராகவ் பிரஷாந்த் (பி.ஈ. முதல் வருடம், அச்சுத்துறை, அண்ணா பல்கலைக் கழகம்):**
செல்ஃபோனை எடுத்துக் கொள்ளுங்

கள். இன்று கொரியா, தைவான் ஆகிய நாடுகளில் உற்பத்தி ஆகும் செல்ஃபோன்கள் கூட உலக அளவில் சக்கைப் போடு போடுகின்றன. ஆனால் நமது நாட்டில் உற்பத்தி ஆகும் செல்ஃபோன்கள், உலகச் சந்தையில் ஏன் போட்டியிட முடிய வில்லை? இந்தியாவிலேயே கூட அவற்றை யாரும் சீந்துவதில்லை. நமது பொருளை நாம் வாங்க வேண்டும். நமக்கு தொழில் நுட்பம் தெரியாதா? இதை ஒரு உதாரணத் துக்குத் தான் சொன்னேன். செல்ஃபோன் போன்று பல பொருட்கள். எங்கே பிரச்னை? யார் காரணம்? நம்மை விட மக்கள் தொகை கூடுதலான சீனா, உலகத்துக்காகவே எல்லாப் பொருளையும் உற்பத்தி செய்வது யாகக் கொண்ட நாடு. எனவே விவசாயத் துறையில் அடையும் முன்னேற்றங்கள், செய்யப்படும் மாற்றங்கள் மட்டுமே மக்களை உயர்த்தும். புதிய பிரதமர் வலியுறுத்த வேண்டியது நவீன வேளாண்மை. விவசாயிகளின் உண்மையான பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டும்.

எதுவும் 'இலவசமாகக் கிடைக்கும்' என்ற


• ரேகாதர்ஷினி


• உத்ரா



# புதிய பிரதமரே!

போல, சந்தைப் பொருளாதாரத்தில் வரிந்து கட்டுகிறது; டாலரை அள்ளுகிறது. அரசின் கையாலாகாத்தனமும், கரடு முரடான நடைமுறைகளும், இளைஞர்களின் கைகளைக் கட்டிப் போடுகின்றன. புதிய பிரதமரே! எங்களைச் சுதந்திரமாகச் செயல்பட விடுங்கள்.

**அநிருத் ரவி (மெக்கானிகல் இன்ஜினியரிங், முதல் வருடம், எம்.என்.எம். பொறியியல் கல்லூரி):**

இந்தியா விவசாயத்தை அடிப்படை மனப்பான்மையை அறவே ஒழிக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் ஒரு விலை வைக்க வேண்டும். அந்த விலையைப் கொடுக்கும் அளவுக்கு, மக்களின் வாங்கும் சக்தியை அதிகப்படுத்த வேண்டும். பால் பொருள் துறையில் வெண்மைப் புரட்சி எப்படி சாத்தியமாயிற்று? கூட்டுறவு அமைப்புகளை உருவாக்கியதால்தானே! அதே போல, வேளாண்துறையில் கூட்டுப் பண்ணைகளை அமைக்க வேண்டும்.

இப்போது பெரிதும் பேசப்படும் 'நதிகள் இணைப்பு' வேலையை உடனே துவங்க



## ப்ருகா-மணக்கால் பிராண்ட்!

"மணக்கால் ரங்கராஜனின் ப்ருகாக்கள் தனி ரகம்!" பாராட்டிய குன்னக்குடி வைத்திநாதனின் பட்டுச் சட்டை, பளபள ஜரிகையோடு டாலடித்தது.

'ப்ருகா' என்பதும் ஜரிகை போல் டாலடிக்கும் சமாசாரம் தான். சங்கீதக் கச்சேரி 'டல்' அடிக்காமல் தூக்கி நிறுத்தும் சக்தி, இந்த டெக்னிக்குக்கு உண்டு. ஆனால் ஜரிகை அசல் வெள்ளியா, அல்லது மலிவான பித்தளையா என்பதைப் பொறுத்துத்தானே அழகும் மதிப்பும்...? அதேபோல் ப்ருகா எனப்படும் அலங்காரம் சுத்தமாக, அளவாக அமைந்தால், இனிய சங்கீதம்; இல்லாவிட்டால் குரல் போடும் குட்டிக் கரணம்தான்!

கடந்த 24.4.04 அன்று குன்னக்குடியிடம் தமது பிருகாக்களுக்குத் தரச் சான்று பெற்ற மணக்கால் ரங்கராஜன், எண்பது வயதைக் கடந்த மூத்த இசைக் கலைஞர். 'அவரது ஆலாபனை, கற்பனை ஸ்வரங்கள் எல்லாம் அலாதியான ரகம்' என்று பாராட்டினார் குன்னக்குடி. சாந்தி ஆர்ட்ஸ் ஃபவுண்டேஷன் ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சியில் நீதிபதி பக்தவத்சலம், ஹம்சத்வனி ராமசந்திரன், வைஜயந்திமாலா பாலி ஆகியோரும் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

எண்பதைக் கடந்த குருவுக்கு அறுபதைக் கடந்த ஒரு சிஷ்யர் சமீபத்தில் வாய்த்திருக்கிறார், சிவராம கிருஷ்ணன். தாமே ஒரு குருவந்தனம் இயற்றி, பிலஹரி ராகத்தில் அமைத்து, இந்நிகழ்ச்சியில் பாடி வாழ்த்தினார்.

- ச்ருதி கீர்த்தி

---

வேண்டும். ஆயிரக்கணக்கான படித்த இளைஞர்களுக்கு அந்தத் திட்டத்தில் வேலையும் கிடைக்கும். நுகர்வோர் பொருள்களைப் பொறுத்த மட்டில், உலக நாடுகளுக்கு நமது நாடு தான் சந்தையாக இருக்கிறது. இந்த நிலை மாற வேண்டும். நமது பொருள்கள் உலகத்தை ஆள வேண்டும்.

**ரேகா தர்ஷினி (கம்ப்யூட்டர் சயின்ஸ், முதல் வருடம், பனிமலர் பொறியியல் கல்லூரி) :**

புதிய பிரதமர் திட்டங்கள் எதுவும் போடத் தேவையில்லை. நமது ஜனாதிபதி கலாம் அவர்களின் vision - 2020 புத்தகத்தில் உள்ளதை அமல்படுத்தினால் போதும். இன்று இளைய தலைமுறையின் நம்பிக்கை நட்சத்திரமாகத் தெரிபவர் அப்துல் கலாம்தான். ஆகவே பிரதமர், ஜனாதிபதியை அலங்கார பொம்மையாக வைத்துக் கொள்ளாமல், அவருடன் தீவிரமாக ஒருங்கிணைந்து பணியாற்ற வேண்டும். அப்படிச் செய்தால் முன்னேற்றம் நிச்சயம். ஊழல், லஞ்சம் என்று யாராவது ஈடுபட்டால், தண்டனை கடுமையாக இருக்க வேண்டும்.

**நித்யா (மருந்தியல், முதலாண்டு, எஸ்.ஆர்.எம். மருத்துவக் கல்லூரி):**

அரபு நாடுகளில், இந்தியாவில் தயாரிக்கப்படும் மாத்திரைகள், மருந்துகள் ஆகியவற்றை மிகவும் நம்பிக்கையுடன் வாங்குகிறார்கள். உலக அளவில் முயற்சி செய்தால், மருந்தியல் துறையில் இந்தியா பிரமாதமாக வளரும் வாய்ப்பு இருக்கிறது. ஆனால் இங்கே பட்ட மேற்படிப்பு முடிக்கும் மருந்தியல் துறையைச் சேர்ந்தவருக்கு, ஆராய்ச்சி செய்யவோ, அல்லது சுய தொழில் துவங்கவோ எந்த ஊக்கமும் கிடையாது. இந்தத் துறையில் அரசின் கவனம் அவசியம். லஞ்ச ஊழலற்ற நிர்வாகத்தை அமைக்கத் தான் இளைஞர்கள் முயல்கிறார்கள். ஐ.ஐ.டியில், படி துபே என்ற இளைஞர், பாட்னாவில் நெடுஞ்சாலைத் துறையில் நடந்த ஊழல்களை அம்பலப்படுத்தினார். அதற்கு விலையாகக் கொடுத்தது அவரது உயிரைத்தான். இப்படியிருந்தால் எந்த இளைஞன் அநீதியை எதிர்த்துப் போராட முன் வருவான்?

தொகுப்பு : ப்ரியன்
படங்கள் : ராஜன்

பத்தாம் தேதி
பகற் கனவுகள்

பிரதமர்

துணைப் பிரதமர்

பிரதமர்

எதிர்காலப் பிரதமர்

இன்னும் சில பகற் கனவுகள்
அடுத்த பக்கங்களில்....

## வீக்கம் வளர்ச்சியாகுமா!

'தீய சக்திகளைத் தோற்கடியுங்கள்' என்று ஜெயலலிதா வேண்டுகோள் விடுக்க...

'தேர்தல் முடிவில் புதுயுகம் பிறக்கும்' என்று கருணாநிதி உறுதியளிக்க....

'யாருக்கு வோட்டுப் போட வேண்டும் என்று நான் சொல்ல மாட்டேன்' என்று கண்துடைப்புச் செய்துவிட்டு, சில தினங்களுக்குள் ரஜினிகாந்த் பிரதமரைச் சந்திக்க...

'தொடங்கிய பணிகளைச் செய்து முடிக்க எங்களை மீண்டும் பதவியில் அமர்த்துங்கள்' என்று பிரதமர் கேட்டுக் கொள்ள...

இவ்விதழ் வெளிவரும்போது நாடெங்கும் தேர்தல் நடந்து முடிந்திருக்கும். புதிய ஆட்சி அமைக்கப்போவது யார் என்பது குறித்து வலுவான அடையாளங்கள் இல்லை. ஆனால், அந்த ஆட்சி எப்படி அமைய வேண்டும் என்பது குறித்து, இந்திய மக்கள் மனத்தில் அர்த்தமுள்ள கனவுகள் மண்டிக்கிடக்கின்றன.

இன்ஃபோஸிஸ், ரிலையன்ஸ், முருகப்பா குழுமம் போன்ற நிறுவனங்கள், ஒரு பில்லியன் டாலர் லாப இலக்கைக் கடந்து விட்டன. இந்தியாவின் அன்னியச் செலாவணி கையிருப்பு, வரலாறு காணாத உயரத்தைத் தொட்டிருக்கிறது.

உணவு தானிய உற்பத்தி, ஆண்டுக்கு ஆண்டு பெருகி வருகிறது. வரி வசூல் முன்னெப்போதையும்விட திருப்திகரமாக இருக்கிறது. புதிய ஆட்சியில் இந்த மகிழ்ச்சிகள் தொடர வேண்டும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், இவை மட்டுமே போதாது. இந்தப் பொருளாதார முன்னேற்றத்தின் பலன்,



# கல்கி



**2004 மே 16**
தாரண வைகாசி 3
மலர் : **62**
இதழ் : **42**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




வறுமைக்கோட்டுக்குக் கீழேயுள்ள இந்தியனையும் சென்றடைய வேண்டும்.

ஆட்சி அமைக்கும் கூட்டணி, 'வல்லரசு' தொழில் நிறுவனங்களுக்கு ஆதரவு அளித்தால் போதாது. சிறிய, மத்திய ரக தொழில்கள் வளர, செழிக்க வகை செய்ய வேண்டும். அத்தகைய தொழில்கள் புதிதாக ஆரம்பிக்கப்படுவதில், தற்போது பல்வேறு முட்டுக்கட்டைகளும், சிக்கல்களும் இருக்கவே செய்கின்றன. இவை நீக்கப்பட்டு விதிமுறைகள் எளிமைப்படுத்தப்பட்டாலன்றி தொழில் வளர்ச்சி போதுமான அளவு இராது; வேலை வாய்ப்புகள் பெருகாது.

வேலை வாய்ப்புகள் பெருகாத நிலையில், 'பொருளாதாரம் முன்னேறியிருக்கிறது' என்று மகிழ்ச்சி கொள்வது, வீக்கத்தை வளர்ச்சி என்று எண்ணி, கொண்டாடுவதற்கு நிகரான செயல்.

விவசாய உற்பத்திப் பொருள்களைச் சேமிக்க வழியின்றி வீணாக்குகிறோம். அவற்றைப் பதப்படுத்தி உணவாக்கும் வகையில் சிறிய அளவிலான புதிய தொழில்கள், விளைநிலங்களின் அருகிலுள்ள பகுதிகளிலேயே தொடங்கப்பட்டால், விவசாயிகளுக்கு ஆண்டு முழுவதும் வேலை வாய்ப்பு இருக்கும் என்பதோடு, உணவுப் பொருள் ஏற்றுமதி மூலம், மெய்யான அன்னியச் செலாவணியும் கிடைக்கும்.

தற்போதைய அன்னியச் செலாவணி கையிருப்பு, பெரும்பாலும் அயல்நாட்டவர் நம் நாட்டு நிறுவனங்களில் பங்குகள் வாங்கியதன் மூலம் பெறப்பட்டுள்ள முதலீடு. அந்த முதலீட்டை அவர்கள் எப்போது வேண்டுமானாலும் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். உள்நாட்டு உற்பத்தியை ஏற்றுமதி செய்வதன் மூலம் பெறக் கூடிய அன்னியச் செலாவணிதான் நிரந்தரமான வருமானமாக நமது கையில் தங்கும். அன்னியக் கடன்களைத் தீர்க்க உதவும். இது விரைவில் நிகழ்வதற்கான ஆரோக்கியமான தொழில் - வர்த்தகச் சூழலை உருவாக்கித் தருவதுதான் புதிய அரசின் முக்கியப் பணியாக இருக்க வேண்டும்.

இதைவிட முக்கியமான பணி, தரமான அடிப்படைக் கல்வியும், சுகாதாரமும் ஒவ்வொரு இந்தியனுக்கும் கிடைக்கச் செய்வது. அடிப்படைக் கல்வித் திட்டத்தை, நடைமுறை வாழ்க்கைக்கு ஏற்ற வகையிலும், உயர்பண்புகளை வளர்க்கும் வகையிலும் வடிவமைக்கும் பணியை, அறிஞர்களிடமும், சமூகவியல் வல்லுனர்களிடமும் விட்டுவிட்டு, அதனை நிறைவேற்றும் பொறுப்பை மட்டுமே அரசு மேற்கொள்ள வேண்டும். கல்விக்கான நிதி




ஒதுக்கீடு கணிசமாக அதிகரிப்பதோடு, கருத்துடன் செலவிடப்பட்டு, நற்பயன் பெற்றுத்தர வேண்டும். சுகாதாரம், சுயமரியாதை, சுயச் சார்பு ஆகியவற்றை விதைத்து வளர்க்கும் வகையில் கல்வி முறை அமைந்துவிடுமேயானால், இந்தியாவுக்கு ஈடாக இன்னொரு நாடு இவ்வுலகில் இருக்க முடியாது. மண் வளத்தோடு இந்தப் பண்பட்ட மனிதவளமும் இணையும்போது, இந்தியா உண்மையிலேயே ஒளிரும்.

எந்தக் கட்சி அல்லது கூட்டணி ஆட்சிக்கு வந்தாலும் இந்தக் கனவுகளை நனவாக்க முடியும். அதற்குத் தேவை ஒன்றே ஒன்றுதான்: 'நாம் இன்று ஆட்சிப் பொறுப்பில் இருப்பது மக்கள் பிரதிநிதியாக, மக்கள் நலனுக்காக' என்கிற நிலையான எண்ணம், ஆட்சியாளருக்கு இருக்க வேண்டும். அது இருந்துவிட்டால், எந்த மக்கள் விரோத நடவடிக்கைக்கும் இடமே இராது. எதிர்க்கட்சியினரும், தாங்கள் மக்கள் பிரதிநிதிகளேயன்றி, ஆளுங்கட்சியின் விரோதிகள் அல்ல என்பதை உணர வேண்டும். பெரும்பான்மை பலமற்ற, பலகட்சிக் கூட்டணி ஆட்சி அமைந்தாலும், அதைக் கவிழ்ப்பதே கண்ணாக எதிர்க்கட்சிகள் செயல்படாமல், ஐந்தாண்டுக் காலம் ஆள அனுமதிக்க வேண்டும்.

தேர்தல் பிரசாரத்தின் தாக்குதல்களும், ஏச்சுக்களும் நாடாளுமன்றத்தில் நுழைய அனுமதிக்கப்படக் கூடாது. தவறுகள் நடக்கும்போது தட்டிக் கேட்கும் அதே பலத்தோடு, எதிர்க்கட்சிகள், சரியான முடிவுகளுக்கும், திட்டங்களுக்கும் ஆதரவு அளிக்கவும் வேண்டும். நாடாளு மன்றம், வெளிநடப்புக்கான விளையாட்டுத் திடல் அல்ல. வெற்று எதிர்ப்பு, என்பது மக்கள் விரோதச் செயல்!

'நம்மைக் கேட்க யார் இருக்கிறார்கள்' என்கிற மனப்போக்குடன்தான் இதுவரை பல ஆட்சிகள் நடந்து முடிந்துள்ளன. அவற்றின் இறுதியில், 'நாங்கள் இருக்கிறோம் தட்டிக் கேட்க' என்று, மக்கள் தங்கள் வாக்களிப்பு மூலம் பதில் சொல்லியிருக்கிறார்கள். ஆட்சியாளர்களின் வெற்றி, உண்மையில் மக்களுடைய விருப்பத்தின் வெற்றி.

எதிர்க்கட்சியினரின் தோல்வியும் உண்மையில் தோல்வி அல்ல... அதுவும் மக்களின் வெற்றிதான். ஜனநாயகத்தில், ஆளுங்கட்சிக்கு நிகராக, எதிர்க்கட்சிகளுக்கும் முக்கியப் பொறுப்புகள் உண்டு.

எனவே ஆட்சி அமைக்கும் கூட்டணி, அடக்கத்துடன் மக்கள் பணி ஆற்றட்டும்; எதிர் அணி பொறுப்புணர்வுடனும், தன்னம்பிக்கையுடனும் செயல்படட்டும்!

• திருச்செல்வம்

• பாஸ்கர் சக்தி

13.ஆர்.அருணாசலம், சென்னை - 50
14.எஸ்.மீனாட்சிராஜன், சென்னை-17
15. முத்து ஆனந்த், வேலூர் - 1
16.சி.ஜெயராஜ், பாளையங் கோட்டை
17. எம்.சாம்பமூர்த்தி, வேலூர்-1
18. எம்.சிவசங்கரி முத்தையா, பாளையங்கோட்டை
19.எஸ்.சண்முகக்கனி, திருச்சி-8
20.ஜி.பார்த்தசாரதி, சென்னை - 94
21.பி.ஜே.விக்னேஸ்வரி, சர்க்கார்பதி
22. கு.ஜானகி, நெல்லை - 6

# தேர்தல் குவிஸ் போட்டி முடிவுகள்

தேர்தல் குவிஸ் போட்டிக்கு ஆயிரக் கணக்கான கூப்பன்களை அனுப்பி எங்களைத் திணறடித்த வாசகர்களுக்கு நன்றி.

ஏராளமாகக் குவிந்த கூப்பன்களில் சரியான விடையெழுதியவர்கள் ஐந்நூறுக்கு மேல். இதில் 'கோலங்கள்' இயக்குனர் திருச்செல்வம் குலுக்கல் முறையில் அதிர்ஷ்டசாலியைத் தேர்ந்தெடுத்தார். முதல் பரிசு ரூ.50,000 வென்ற அந்த அதிர்ஷ்டசாலி :

***ஜீ. கிருஷ்ணமூர்த்தி,***
***ப.எண்.10, பு.எண்.25, மதுரை தெரு,***
***பெரம்பூர், சென்னை - 600 011.***

**வசனகர்த்தா பாஸ்கர் சக்தி தேர்ந்தெடுத்த ஆறுதல் பரிசு ரூ.100 பரிசு பெறும் 50 வாசகர்கள் :**

1. கே. ராஜேந்திரன், ராமச்சந்திராபுரம், பொள்ளாச்சி
2. எல். காமாக்ஷி, சென்னை - 61
3. கே.எம். இளங்கோ, நாமக்கல் - 1
4. கி.தாமோதரன், ராமநாதபுரம், கோவை-45
5. வி.கனகவல்லி, நாகை - 1
6. எஸ்.காமேஸ்வரி, சென்னை - 34
7. வி.எஸ்.கௌரி ராமமூர்த்தி, திருச்சி - 21
8. கி.ராஜகோபாலன், நெல்லை - 1
9. எஸ்.ஆர்த்தி, கொங்கணாபுரம்
10.மலை அரசன், அருகுந்தம்பூண்டி
11.ஜெயலட்சுமி, சென்னை - 40
12.கே.காளிமுத்து, எருமகுளம்

23.எஸ்.நடராஜ், சர்க்கார்பதி
24.மீனா ராஜாராமன், தேனி
25.எஸ்.திருமலை, கோவை - 9
26.கோ.அய்யாசாம், வேலூர் - 2
27.பி.ஸ்ரீநிவாசன், சென்னை - 55
28.ஆ.நல்லமுத்து, கோவில்பட்டி
29.எல்.மாறன், மேல்பட்டி
30.வி.ராதிகா, சேலம் - 5
31.கோ.முரளிதர், சென்னை - 42
32.வெ.கல்யாணி, திருவண்ணாதபுரம்
33.சுப்புலெட்சுமி பழனிவேலு, கோவை-18
34.ம.தனமூர்த்தி, மேதரமாதேவி
35.கி.வெங்கடேசன், கோனூர்
36.ஏ.ஜாபர் சாதிக், ஆனைமலை
37.எஸ்.ஹேமா நாதன், குமராபுரி
38.ஏ.ஸ்டேன்லி ஜோசப், கோவில்பட்டி
39.வி.கே.கஸ்தூரி ரங்கன், சென்னை - 61
40.எஸ்.சக்கரபாணி, சென்னை - 41
41.ஸ்ரீ.சத்யபாமா, காஞ்சிபுரம்
42.எஸ்.ஜானகி, கணியூர்
43.ஜே.தேன்மொழி, அரியாங்குப்பம்
44.எஸ்.சரஸ்வதி, மேலப்பனங்காடி
45.சு.எழிலரசன், வேலங்குடி
46.ஏ.வி.ராகவன், சென்னை - 11
47.ஆர். பாலமுருகன், கூளேஸ்வரன்பட்டி
48.ஈ. விஜயவல்லி, சென்னை -33
49.கிருத்திகா சுப்ரமணியம், ஸ்ரீ ரங்கம்
50.பி. ஜெகந்நாதன், மேலப்பத்தை

***பரிசு பெற்றவர்களுக்குப் பாராட்டுகள்!***

# வாடா என் மச்சி: வச்சிருக்கேன் கட்சி!

டி.ஆர்- 'நான் யாருன்னு' காட்டுறேன்னு காட்டாறா கிளம்பிட்டாரு! அவரோடு ஒரு 'மினி' கற்பனைப் பேட்டி..

*நீங்க பண்ணிய தப்பு எது?*

எம்ஜிஆரு பின்னால போயிருந்தா எட்டி யிருப்பேன் உச்சி!

போகல - தப்புதான் - திரும்பி ஆரம் பிச்சுட்டேன் கட்சி!

நியாயம் என்றும் சொல்வேன் மறந்துடாத மச்சி!

*ஏன் இப்படி முடிவு எடுத்தீங்க?*

கழகத்துக்காகச் சிந்தினேன் செந்நீர்!
ஆனா எனக்குக் கிடைச்சதோ கண்ணீர்!
என் இதயத்தில் கொதிக்குது வெந்நீர்!
காஞ்சியில கிடைச்சிடுச்சு திருநீறு!

*புதுக்கட்சியோட கொள்கை என்ன?*

இந்த டி.ஆர். உடம்பெல்லாம் பாசம்
இரத்தமெல்லாம் ரோசம்
ஸ்கிரீனுல மட்டும்தான் கட்டுவேன் வேஷம்
இனிமே என் இலட்சியக்கழகம் பேசும்!

*உங்க பாதையில 'சிம்புவோட' பங்கு என்ன? (உணர்ச்சி வசப்பட்டு அழுதபடி)*

தாயகத்தைக் கலைக்காதேன்னு அன்னிக்கே சொன்னாரு சிம்பு!
தாய்க் கழக வாரிசால வந்து சேர்ந்திச்சு வம்பு!
அதனால தூக்கிட்டேன் தனியா நான் சொம்பு!
'சிம்பு' எனக்குத் தருவாரு 'தெம்பு!

*மக்களுக்கு நீங்க சொல்லுற திருவாசகம்...? (தலையை சிலுப்பிக் கொண்டு)*

ஆவடி வழியா போனா அரக்கோணம்
கறுப்பு சிவப்பு மஞ்சள் முக்கோணம்
பசுவுன்னா பால் கறக்கோணும்
என்னிக்கும் என்கிட்டே நியாயம் ஜெயிக்கோணும்!

- வித்யன்



# அட்டாக்; ஹார்ட் அட்டாக்!

வஸந்த் செந்தில்

புள்ளிவிவரப்படி ஹார்ட் அட்டாக் வருவதற்கான அறிகுறிகளோடு, பத்துக்கு ஒரு நபர் நம் நாட்டில் உலவிக் கொண்டு இருக்கிறார். பத்துக்கு ஒருவர் என்றால், அந்த நபர் நம் கண் முன்னே இருக்கிறார், அல்லது அது நாமாகக் கூட இருக்கலாம் என்பது தான் அந்த அதிர்ச்சி தரும் தகவல். திடீரென்று யாருக்கும் நெஞ்சடைப்பு வருவதில்லை. ஹார்ட் அட்டாக் என்பது, பல கூட்டுப் பிரச்னைகளின் தொந்தரவான கலவை. அது, பல அறிகுறிகளோடும், பராமரிக்கப்படாத மருத்துவ சிகிச்சைகளோடும், பல நம்பிக்கையற்ற தகவல்களோடும், பாதி உண்மைகளோடும் நம்மிடம் ஊடுருவி நிற்கிறது. டாக்டர் டேனி பீட்டர்ஸ், ஹார்ட் அட்டாக் பற்றி உங்களுக்கு என்ன தெரியும் என்று சில கேள்விகள் எழுப்புகிறார்.

1. நீங்கள் உங்கள் தேவையான எடைக்கு மேலே பத்துக் கிலோ இருக்கிறீர்கள் என்றால், இதயக் கோளாறுகள் வருவதற்கான வாய்ப்பு இருக்கிறது என்று அர்த்தம். அந்த உபரி எடைகளை இழப்பது ஆரோக்கியத்துக்கு நல்லது. இது உண்மையா?

உண்மைதான். ஆனால் மொத்தமாக பத்துக் கிலோவையும் இழப்பது தேவையில்லை. மூன்று முதல் ஆறு கிலோ வரை குறைத்தால் போதும். பின், தொடர்ந்த உடற்பயிற்சியும், சீரான உணவும் பாதுகாப்பளிக்கும்.

2. நிறையப் பெண்கள் மார்பகப் புற்று நோயால் இறக்கிறார்கள். இதயக் கோளாறுகளால் அல்ல. இது உண்மையா?

இது உண்மையில்லை. இதயக் கோளாறுகள் தான் பெண்களின் மரணத்திலும் முக்கிய இடம் பிடித்திருக்கிறது. ஆனால் ஆண்களை விட, சற்றுத் தாமதமான வருஷங்களுக்குப் பிறகு பெண்களுக்கு இதயக் கோளாறுகள் ஏற்படுகிறது.

3. நீங்கள் கொலஸ்டிராலைப் பற்றிக் கவலைப் படும்போது, முட்டையை கண்டிப்பாகச் சாப்பிடக் கூடாது. உண்மையா?

இல்லை. ஒரு நாளைக்கு ஒரு முட்டை மேலும் அதிக சக்திக்கு உதவும். இது கொலஸ்டிரால் உயர்வுக்கு உதவுவதில்லை. மிகமிக அதிக கொலஸ்டிரால் வைத்துக் கொண்டு சிரமப்படுகிறவர்கள், ஒரு வாரத்திற்கு இரண்டு சாப்பிடலாம்.

4. வாக்கிங் போனாலே போதும். அதுவே உங்கள் இதயத்தைப் பாதுகாப்பாக வைத்திருக்கும். உண்மையா?

உண்மை. தினமும் அரைமணி நேரம் துள்ளல் நடை நடந்தாலே போதும்.

5. திடீரென்று புகைபிடிப்பதை நிறுத்தி விட்டால், உடனே இதயமும் முந்தைய பாதிப்புகளிலிருந்து உடனே விடுதலை பெற ஆரம்பிக்கும். உண்மையா?

உண்மை. ஆனால் உடனே இல்லை. குறைந்த பட்சம் இரண்டு வருடங்கள் தேவை.

6. கருப்பையின் மாதச் சுழற்சியில் இருந்து விடுபட்டு மெனோபாஸ் நிலையை அடைந்த பெண்களுக்கு ஹார்மோன் ரீப்ளேஸ்மெண்ட் தெரபி செய்வதன் மூலம் ஹார்ட் அட்டாக்

# ஹலோ நீங்க சுகமா? 15



வருவதைத் தடுக்கலாம். உண்மையா?

முன்பு உண்மை என்று இது கருதப்பட்டு வந்தது. இதற்காக HRT என்கிற ஈஸ்ட்ரோஜன், புரோஜெஸ்டரான் மருந்துகளை டாக்டர்கள் பயன்படுத்தி வந்தனர். ஆனால் இப்போது இது தவறு என்று நிரூபிக்கப்பட்டு விட்டது.

7. ஒரு கப் ஒயின் தினந்தோறும் சாப்பிடுவது இதயத்துக்கு நல்லது. உண்மையா?

உண்மை. இது ஹார்ட் அட்டாக் ஏற்படுத்தும் கெட்ட கொலஸ்டிராலை விரட்டி விடுகிறது. ஆனால் தரமான ஒரு கப் ஒயினின் விலை குறைந்தது நூறு ரூபாய்!

8. கடுமையான மன அழுத்தம் ஹார்ட் அட்டாக்கை வரவழைக்கிறது. உண்மையா?

யெஸ் என்கிறது பல்வேறு ஆய்வு முடிவுகள். மன அழுத்தம் மூளையின் செயல்பாடுகளில் குறுக்கிட்டு, அதன் மூலம் சீரற்ற இதயத்துடிப்புகளை ஏற்பட வழி வகுக்கிறது என்கிறார்கள். கூடவே மன அழுத்தம், ஒழுங்கான வாழ்க்கை முறையைக் குலைப்பதால் இதயத்தின் மேல் கல்லெறிகிறது. ஆனால் மிக மிகக் கடுமையான மன அழுத்தத்தில் இருக்கிற பலர், இதய நோயால் பாதிக்கப்படுவதில்லை. ஆக, ஸ்ட்ரெஸ் என்பதை நீங்கள் எப்படி ஆளுகிறீர்கள் என்பதைப் பொறுத்து இதயம் செயல்படுகிறது.

9. ஒழுங்காகப் பல் தேய்ப்பது இதயக் கோளாறுகளை கட்டுப்படுத்தும், உண்மையா?

உண்மை. வாயில் தொந்தரவு இருக்கிறவர்கள், சாதாரணவர்களைவிட இரு மடங்கு ரிஸ்க்கில் இருக்கிறார்கள்.

அட்டாக், பைபாஸ் சர்ஜரி இவற்றைத் தவிர்க்க ஆய்வாளர்கள் ஏதாவது செய்து கொண்டிருக்கிறீர்களா என்றால் இருக்கிறார்கள். ஊசி மருந்தின் மூலம் இதய அடைப்பு ஏற்படாமலிருக்கவும், அடைப்பைக் கட்டுப்படுத்துவதற்கான முயற்சியும் சோதனையில் இருக்கிறது. புதிய இரத்தக் குழாய்களை வளர்ப்பது, அல்லது பழுதடைந்த இதய செல்களைத் திரும்ப உயிரூட்டுவது என்பது இதன் நோக்கம். ATTACK HEART ATTACK!

(தொடரும்)

"அந்தச் சின்னத் தளிருக்குப் பின்னால், ஒரு சோகக் கதையும், சுவாரசியமான விஷயமும் இருக்கு. சில நாட்களுக்கு முன்னால் தாம்பரம் போலீஸ் ஸ்டேஷன்ல இருந்து ஃபோன். ரயில்வே ஸ்டேஷனில் ஒரு மூலையில், யாரோ ஒரு குழந்தையை போட்டுவிட்டுப் போயிட்டாங்க. எடுத்து வெச்சிருக்கோம். வந்து வாங்கிட்டுப் போங்க'ன்னு சொன்னாங்க. எடுத்துக்கிட்டு வந்து, இங்க வெச்சு பாத்துக்கறோம்" என்றார் ரஜினி தேவி. இவர் சென்னை முகப்பேரில் இருக்கும், கலைச்செல்வி கருணாலயா என்கிற தன்னார்வத் தொண்டு நிறுவனத்தைச் சேர்ந்தவர். இந்த அமைப்பின் ஒரு அங்கம், பூந்தளிர். அனாதைகளாக விடப்பட்ட சிசுக்களை எடுத்துப் பராமரிக்கிற பணியைப் பூந்தளிர் செய்து கொண்டு இருக்கிறது.

தற்போது பூந்தளிரில் மொத்தம் இருபத்தி ஆறு குழந்தைகள் பராமரிக்கப்பட்டு வருகின்றன. இதில் பெரும்பாலானவை சேலம், நாமக்கல், தேனி, தர்மபுரி, திண்டுக்கல் பகுதிகளிலிருந்து கொண்டு வரப்பட்ட தொட்டில் குழந்தைகள்!

"இந்த ஊர்களில் எல்லாம், தொட்டில் குழந்தைகளுக்கென்றே பிரத்யேகமான மையங்கள் இருக்கின்றன. ஆனால், வேண்டாத குழந்தைகளைப் பெற்றெடுக்கிற தாய்மார்கள், குழந்தைகளை, தொட்டில்களில் போட்டுவிட்டுப் போகிற அளவுக்குக் கூட கருணை இல்லாமல் இருக்கிறார்கள். அண்மையில் விருத்தாசலம் ஆஸ்பத்திரியில், துணியில் சுற்றிய குழந்தையை, ஒரு முட்புதரில் போட்டுவிட்டுச் சென்ற கொடுமை கூட நிகழ்ந்தது. குழந்தையின் உடம்பில் முள்குத்தி, ரத்தம் வழிந்து, காய்ந்து போனதைப் பார்க்க வேதனையாக இருந்தது" என்கிறார் ரஜினிதேவி. எம்.ஏ.சோஷியல் ஒர்க் படிப்பை முடித்து விட்டு, கடந்த எட்டு வருடங்களாக, கலைச்செல்வி கருணாலயாவில் பணி புரிகிறார் ரஜினி.

இந்த தன்னார்வத் தொண்டு நிறுவனத்தைத் துவக்கியவர் புருஷோத்தமன். "ஹை ஸ்கூல் படிப்பு தொடங்கி, எம்.ஏ.வரை இலவச ஹாஸ்டலில் தங்கிப் படித்தவன் நான். அதன்பின் ஓட்டல் ஒன்றில் வேலைக்குச் சேர்ந்து, கடும் உழைப்பினாலும், முயற்சியினாலும் முன்னுக்கு வந்தேன். ஒரு கட்டத்தில் ஆதரவற்றவர்களுக்கு உதவ வேண்டும் என்பதற்காக, கலைச் செல்வி கருணாலயாவை ஆரம்பித்தேன்" என்று தன் முன் கதைச் சுருக்கத்தைச் சொன்னார் புருஷோத்தமன்.

இன்று கலைச் செல்வி கருணாலயா, தமிழக அரசாங்கத்தின் நிதி உதவி பெற்று செயல்பட்டு வருகிற அமைப்புகளில் ஒன்று. விழுப்புரம், தேனி என்று மற்ற ஊர்களிலும் கூட செயல்பட்டு வருகிறது. விதை, அரும்பு, மொட்டு, ரோஜா, சிறகு என்று நிறைய குழந்தைகளுக்கான பகல் நேரக் காப்பகங்கள். சாந்திவனம், நிழல் என்று நாலு முதியவர்களுக்கான பகல் நேரக் காப்பகங்கள், தபஸ்யா, ஒத்தடம் என்று முதியோர் இல்லங்கள். மனுஷி என்ற பெயரில், பாதிக்கப்பட்ட பெண்களுக்கான குறுகிய கால பாது காப்பகங்கள், சுகஜீவன் என்ற



# தவிக்கும் குழந்தைகள், தடுமாறும் அமைப்பு!





ஆலோசனை மையம், என ஏகப்பட்ட பணிகளை மேற்கொண்டுள்ளது.

''ஆதரவற்று, ஆஸ்பத்திரிகளில் விடப்படும் குழந்தைகளில் பல, மனநலக் குறைவு, உடல் ஊனம், போன்ற பிரச்னைகளால் பாதிக்கப்பட்டவையாக உள்ளன. அப்படி இல்லை என்றால், எடை குறைவாக, இருக்கின்றன. தாய்ப்பாலும் கிடைக்காத சூழ்நிலையில், சத்தான பாலூட்டி வளர்ப்பது பெரிய சவால்தான். ஒவ்வொரு குழந்தைக்கும் தேவைப்படுகிற லேக்டோஜன் போன்ற பாலுணவு விலை அதிகரித்துக் கொண்டே போகிறது. எங்களால் சமாளிக்க முடியாமல் திணறிக் கொண்டு இருக்கிறோம். எங்கள் அமைப்பு பொதுமக்களிடையே வெகு பிரபலமானதாக இல்லை என்பதால், பொது மக்களுக்கு எங்களைப் பற்றித் தெரியவில்லை. கிடைக்கிற நன்கொடை குறைச்சல். உதவுகிற நோக்கம் கொண்டவர்கள், எங்கள் குழந்தைகளுக்கு, பால்பவுடர் டப்பாக்களை வாங்கும் செலவை ஏற்றுக் கொண்டால், ரொம்ப உதவிகரமாக இருக்கும்'' என்கிறார் ரஜினி. குழந்தையில்லாதவர்கள், இந்த மையத்துக்கு வந்து, பிடித்த குழந்தையை சட்டப்படி தத்து எடுத்துக் கொள்ளலாம்.

''அப்படி யாராவது வருகிறார்களா?''

''வருகிறவர்கள் பெரும்பாலும் ஆண் குழந்தைகளையே தத்து எடுக்க விரும்புகிறார்கள். காரணம், தத்து எடுத்துக் கொள்ளும் குழந்தை ஆணாக இருந்தால், கடைசி வரை பெற்றோர்களுடனே இருக்கலாம். பெண்ணாக இருந்தால், திருமணமாகி, வளர்த்த பெற்றோர்களை விட்டுப் போய் விடுவார்களில்லையா? இதையும் தாண்டி, பெண் குழந்தைதான் வேண்டும் என்று கேட்கிறவர்களும் இருக்கிறார்கள்.''

''ஆரம்பத்தில் ஒரு குழந்தையைப் பற்றிய சோகக் கதையைச் சொன்னீர்கள். அதைப் பற்றிய சுவாரசிய தகவல் இருப்பதாகவும் சொன்னீர்களே?''

''அதுவா! அந்தக் குழந்தைக்கு நாங்கள் வைத்திருக்கும் பெயர் சௌந்தர்யா. நடிகை சௌந்தர்யா, விமான விபத்தில் பரிதாபமாக இறந்துபோன அதே நாளில், பூந்தளிருக்கு வந்த மொட்டு அது!''

**- எஸ். சந்திரமௌலி**

படங்கள் : **கௌதம்ராம்**



* புருஷோத்தமன்



* ரஜினி






# ‘சிரிப்பு’ கொடுத்தாரு!









கருத்து : உதய்
கார்ட்டூன் : பிள்ளை

# வலம்புரி முத்து

கதிரேசன், சிதம்பரம் செட்டியாருக்குப் பிறந்தவன்தான். ஆனால் தெய்வானை ஆச்சிக்குப் பிறந்தவன் இல்லை. கதிரேசனின் அம்மா கனகா, மதுரை திண்டுக்கல் வீதியில், நன்மை தருவார் கோவிலுக்குச் செல்லும் சந்து ஒன்றில் காலம் காலமாக, அரிதாரம் பூசி வந்த பரம்பரையைச் சேர்ந்தவள். தாய் வழி சமூகம். பவளக் கொடி, அல்லி அரசாணி, ஹரிச்சந்திரா என வேடம் கட்டிய பழைய தலைமுறையிலிருந்து வேறுபட்டு, சமூக நாடகங்கள் என்ற பெயரில் கனகா வேடம் கட்டி வந்தாள். நிறையப் படிப்பாள். வாரப் பத்திரிகைகளில் ஆரம்பித்த தேடல், முடிவின்றி எழுத்து எனும் பெருவெளியில் சென்று கொண்டே இருந்தது. தன் வாழ்விற்கும், தான் படிக்கும் புத்தகங்கள் காட்டும் வாழ்விற்கும் தொலைவு அதிகம் என பட்டது. அந்த நேரத்தில்தான் சிதம்பரம் செட்டியாருடன் பழக்கம் ஏற்பட்டது.

சிதம்பரத்தின் முன்னோர்கள் பிள்ளையார்பட்டி கோவிலைச் சேர்ந்தவர்கள். காரைக்குடியில் தலைமுறை தலைமுறையாக, ஆங்கில மருந்துகளுக்கும், மொத்த முனைவர்களாக இருந்து 'வள்ளி மெடிகல்ஸ்' என்ற தனிப் பெயரில் பிரபலமானவர்கள். காரைக்குடி, தேவகோட்டை என்றில்லாமல், கிளை மதுரை வரை பரவிய பொழுதுதான் சிதம்பரத்திற்கு ஓர் ஆங்கில மருத்துவர் மூலமாக, கனகாவுடன் பழக்கம் ஏற்பட்டது. கனகாவின் அழகிற்கும், சட்டென்று புரிந்து கொள்ளும் அறிவிற்கும், கோடம்பாக்கம் சென்றிருந்தால் எண்ண முடியாத உயரங்களைத் தொட்டிருக்கலாம். தொடவில்லை. காரணம் கேட்டார்.

"என்னை முற்றிலும் இழந்து, என் மேல் விழும் மேடை வெளிச்சம் என்னை பரவசப்படுத்தாது" என்றாள் கனகா.

"இதை வேறு இனப் பெண்கள் கூறுவதற்கும், நீ கூறுவதற்கும் நிறைய வேற்றுமை இருக்கிறது"

அவர் கூறுவதைப் புரிந்து கொண்டு கனகம் சிரித்தாள்.

"என்னையும், என் ரசனைகளையும் புரிந்து கொண்டு ஓர் ஆண் வரும்வரை, நான் இதற்கு மேலும் நசிவடைய வேண்டாம் என்பதால், சினிமாவிற்கு முயற்சிக்கவில்லை."

"அந்த ஆண் ஏன் நானாக இருக்கக் கூடாது?" இந்தக் கேள்வியை சிதம்பரம் கனகாவிடம் கேட்கும் பொழுது சிதம்பரத்திற்கும் தெய்வானைக்கும் நாட்டரசன்கோட்டையில் திருமணம் முடிந்து, அழகப்பன், அண்ணாமலை, நாகப்பன் என்ற மகன்களும், விஜயா என்ற மகளும் பிறந்துவிட்டனர். சிதம்பரமும் நாற்பது வயதைக் கடந்து விட்டார்.

கனகா ஆறேழு மாதங்கள் சென்ற பின்னரே சம்மதம் அளித்தாள்.

சிதம்பரம் அவளை திண்டுக்கல் வீதியிலிருந்து பெயர்த்து, புறநகர்ப் பகுதியில் தனி வீடு ஒன்றில் குடியேற்றினார். தனது வியாபார விஷயமாக மதுரை வரும் பொழுதெல்லாம், கன்கா வீட்டில் குடித்தனம் செய்வதோடு நின்றுவிடாமல், ஒரு நல்ல முகூர்த்த நேரத்தில் மீனாட்சியம்மன் கோவிலில் கனகாவுக்குக் கழுத்துரு கொண்டு திருப்பூட்டவில்லை எனினும், அரை சவரன் தாலி தொங்கிய மஞ்சள் கயிற்றைக் கட்டினார்.

ஆரம்பத்திலேயே கனகாவுடன் தமக்கு ஏற்பட்ட நெருக்கத்தை, சிதம்பரம் தெய்வானை ஆச்சியிடம் சொல்லிவிட்டார். முதல் ஒரு வருடம் ஆச்சி கொதித்து விட்டாள். வேற்றான் முன்னிலையில் இருவரும் பேசிக் கொள்வது போலத் தோன்றினாலும் அவர்கள் இருவருக்கு மட்டும் இடையிலிருந்த கசப்பு தெரியும். சில சமயம் சிதம்பரம், தெய்வானையுடனான தனிமையைத் தவிர்த்தார். நான்கு பிள்ளைகளுக்குத் தாய், தகப்பனான

# சத்தியப்ரியன் 2

பெற்றோருக்குத் தனிமை கிடைப்பது அபூர்வம் தான். மேலும் அவர்கள் வாழ்ந்த வீடு வளவு வீடு. சுற்றுப்பத்தும், பிரும்மாண்ட முற்றமும், பட்டகசாலை வரிசை முழுவதும் அறைகளால் நிறைந்திருக்கும் வீடு. வளவு வீடுகளை அவ்வீட்டைச் சேர்ந்த பங்காளிகளே பிரித்துக் கொள்வதால், புள்ளி அளவிலும் அது பெரிய வீடு. சில சமயம் கிடைக்கும் தனிமையான சந்தர்ப்பங்களில் கனகா நல்ல பெண்தான் எனவும், அவளால் தெய்வானை ஆச்சிக்கோ, அவள் பிள்ளைகளுக்கோ எந்தவிதமான



இழப்பும் நேரிடாது என உறுதி அளித்தார்.

அவர் சொன்னதில் பொருள் இல்லாமல் இல்லை. வள்ளி மெடிகல்ஸ் அவர்களது பரம்பரைத் தொழில் என்றாலும், போன தலைமுறையில் சீர்கெட்டுப் போயிருந்த நிர்வாகக் கோளாறுகளையெல்லாம் சரி செய்து, இழந்து நின்ற பெரிய நிறுவனங்களின் நிபந்தனையற்ற ஏஜன்ஸிகளைப் பெற்று, காரைக்குடி, கோட்டையூர், பள்ளத்தூர், திருப்பத்தூர் என, காரைக்குடி தெற்கு வரையிலும் கடைகளின் எண்ணிக்கையைப் பெரிது படுத்திக் கொண்டே சென்று, மதுரை வரையில் கிளை பரப்பிய பெருமை சிதம்பரத்தையே சாரும். உடன் பங்காளிகள் இருந்த தெம்பில், சிறிய அளவில் லேவாதேவி, சிட்ஃபண்ட்ஸ், ஷேர் ப்ரோக்கர், மொர்காராவிலும், மைசூரிலும் காஃபி எஸ்டேட், ஊட்டியில் தேயிலைத் தோட்டம், நாகர்கோவிலில் ரப்பர் தோட்டம் என, வியாபார எல்லைகளை சிதம்பரம்தான் விரிவுபடுத்தினார். பிள்ளைகளையும், மனைவியையும் தன் காலத்திற்குப் பின் சென்றடைய வேண்டிய சொத்து, ஆசைநாயகியால் பாதிக்கப்



''விருந்தாளி ரொம்ப விவரமான ஆசாமி!''

''அப்படியா!''

''ஆமாம். வரப்போறேன்னு எனக்கு மட்டும் எழுதாம, மளிகைக் கடை, காய்கறி அங்காடி, பால்பூத், ஆட்டோக்காரர்னு எல்லாருக்கும் தகவல் கொடுத்து இருக்கார்!''

- பர்வதவர்த்தினி

பட்டு விடுமோ என ஆச்சிகள் பாதை மாறிப்போன தலைவனுக்கு வருத்தப்படுவது நடைமுறை வழக்கம்தான். தெய்வானை ஆச்சிக்கு கணவன் எனும் கூறு போட முடியா சொத்து இரண்டாகப் பிளவுபட்ட பின்பு, மற்ற சொத்துக்கள் எப்படிப் போனால் என்ன என்று ஆத்திரம் வந்தது. சம்மதமின்மையை மௌனத்தால் வெளிப்படுத்தினாள்.

ஓரிரு ஆண்டுகள் ஆனபின்பும் இந்த நிராகரிப்பு தொடர்ந்தது. கணவனின் நிலை, பெற்ற மகனுக்குக் கூடத் தெரியாமல் தெய்வானை பார்த்துக் கொண்டாள். இந்த ஓரிரு ஆண்டுகளில் சிதம்பரம் தெய்வானை மேல் வெறுப்புற்றோ, அல்லது கனகம் மேல் அதிக அக்கறை செலுத்துவதோ அல்லாமல், எப்பொழுதும் போல் தமது அக்கறையையும், அன்பையும் தொடர்ந்த வண்ணம் இருந்தார். தெய்வானை கொஞ்சம் நெக்கு விட்டாள்.

"இடுப்புச் சதையில மடிப்பு விளுந்து போச்சு. குந்தாணி மாதிரி உட்கார்ந்து இங்கறேன் இல்ல, ஒடம்பு சதை போட்டு விகாரமா ஆயிடுச்சு. நா ஒரு மருக்கோளி (பைத்தியம்) பிள்ளைங்களை ஆளாக்குற துலயே மௌனக்கெட்டுக் கெடந்தேன். ஆச்சிக்கு வளவுதான் ஒலகம்னா, செட்டியாருக்கு ஒலகந்தான் வளவு. செட்டியாருக்கு ஒரு சம்சாரம் போதாதுங்கற அறிவு வேணாம்?" என்றாள் ஒரு நாள், ஆளுயர பெல்ஜியம் கண்ணாடி முன்பு தன் அழகைப் பார்த்தபடி.

'நீ ரெண்டாம் பட்சமா போயிட்டன்னு இன்னொருத்தி பின்னாடி போகலை."

"பிறகு?"

''இலக்கிய ரசனைக்கு, தமிழின் அழகை ரசிப்பதற்கு எனக்கு ஒரு துணை வேண்டியிருந்தது. மேலும் அவளுடன் ஏற்பட்ட தொடர்பை பாதியில் துண்டித்துவிட மனம் இடம் தரவில்லை."

"ஆம்பிளை செஞ்சா எதுவும் நியாயந்தான். இனிமே புலம்பி என்ன செய்யிறது. நானு மதுரைக்குப் போயி அவுகளை பார்க்கலாம்னு இருக்கேன். கூட்டிக்கிட்டுப் போவியாளா?" என்றாள்.

மதுரைக்கு கார் எடுத்துக் கொண்டு தெய்வானையைக் கூட்டிக் கொண்டு போனார்.

முதன் முதலாக கதிரேசன் தெய்வானை ஆச்சியைப் பார்த்தபொழுது, அவனுக்கு மூன்று வயது முடிந்திருந்தது. தெய்வானை ஆச்சி நல்ல மஞ்சள் பூசிய நெற்றியில் விபூதியும், தாழம்பு வாசனையுடைய குங்குமமுமாய் அவனை அள்ளித் தூக்கி, உச்சி முகர்ந்து, கன்னத்தில் முத்தம் கொடுத்ததுதான் நினைவில் இருக்கிறது.

"காரு, பங்களா, கண் நிறைஞ்ச புருஷன், பிள்ளைங்கன்னு ஒய்யார வாழ்க்கை வாழ்ந்துட்டேனா? திருஷ்டிப் பட்டுறப் போவுதுன்னு அவுஹ வெச்ச கறுப்புப் பொட்டுதான் இது" என்று கதிரேசன் கன்னத்தைத் தட்டியபடி சொன்னாள்.

"அவன் ஒண்ணும் கறுப்புப் பொட்டில்லை" என்றாள் கனகம்.

"சரி செவப்புப் பொட்டு. பையனுக்கு என்ன பேரு வெச்சுக் கூப்புடறீங்க?"

"கதிரேசன்."

தெய்வானை ஆச்சிக்குப் பேச்சு வரவில்லை. மூத்த மகன் அழகப்பனுக்கு சிதம்பரத்தின் அப்பச்சி பெயரையும், இளையமகன் அண்ணாமலைக்கு அவளுடைய அப்பச்சியின் பெயரையும் சூட்டினார்கள். கடைக்குட்டி நாகப்பனுக்கு சிதம்பரத்தின் அய்யா பெயரை வைத்தார்கள். சிதம்பரத்தின் வயதான அம்மான் ஒருவர், கதிரேசன் என்ற பெயரில் தமிழுக்கும், சைவத்திற்கும்

தம்மை முற்றிலும் அர்ப்பணித்துக் கொண்டவர் என்றும், தமிழ் வளர்ச்சிக்கு தமது ஏராளமான சொத்துக்களை ட்ரஸ்ட் அமைத்து எழுதி வைத்து விட்டதாகவும் மிகவும் பெருமையாகச் சொல்வார். அப்படியொரு பெயரைத் தாங்கிய படி பிள்ளை நின்றதும், தெய்வானை ஆச்சிக்கு அவன் மேல் ஒரு மெல்லிய இழை அபிமானமாய்ப் படர்ந்தது.

"ஏபிஸிடி தெரியுமாய்யா?" என்றாள்.

பிள்ளை தெரியாது என மறுத்தது.

"நர்சரி ரைம்ஸ் தெரியுமா?" என்றாள்.

அதற்கும் தெரியாது என மறுத்தது.

"பெறவு பிள்ளைக்கு என்ன சொல்லி வளர்த்திருக்கீக?" என்றாள் கனகத்தைப் பார்த்து.

"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே பாடு கதிரு" என்றதும் பிள்ளை பாடத் தொடங்கியது.

"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்மையே பெருக்கிப்
பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆயசிவ பதமளித்த
செல்வமே சிவபெருமானே..." என

தனது மழலை மாறாக் குரலில் பாடியதைக் கேட்டதும், தெய்வானை ஆச்சிக்கு நிஜமாகவே மெய்சிலிர்த்தது. வாரியணைத்து உச்சி முகர்ந்தாள்.

"ஓலியமாத்தான் பிள்ளையை வளர்த்திருக்கீக. பிள்ளையைக் கூட்டிக்கிட்டு வளவுக்குப் போயிரலாம்னுதான் இருக்கு. எல்லாரும் ஏத்துக்கிடுவாஹளான்னு தெரியலை. பிள்ளை இங்கேயே வளரட்டும். நல்லவிதமா படிச்சு அப்பச்சி பேரைக் காப்பாத்தட்டும். அவுஹ இருக்காஹ. அப்பப்ப நானும் வந்து பார்க்கிறேன்" என்றாள்.

இரண்டே இரண்டு வருடங்கள்தான் சிதம்பரம் செட்டியார் உயிருடன் இருந்தார். சதா சர்வ நேரமும் மருந்துக்கடை, எஸ்டேட், பங்குச் சந்தை என அலைந்து கொண்டிருந்தார். மஞ்சள் காமாலை யமனாக வந்தது. கீழ்வாநெல்லி கஷாயத்தை நாட்டு மருத்துவரிடம் வாங்கிக் குடிக்க, நோய் முற்றி, கல்லீரல் முற்றிலும் சேதப்பட்டு இறந்து போனார்.

மலையாள வைத்தியனை
மடிவசமாய்க் கூட்டி வந்தோம்
மலையாள வைத்தியனும் மருந்தறிய
மாட்டலையே
சீமை வைத்தியனைச் சீக்கிரமாய்க்
கூட்டி வந்தோம்
சீமை வைத்தியனும சீக்கறிய
மாட்டலியே

அப்பச்சியின் இழவுக்கு வந்திருந்த கதிரேசனுக்கு, தந்தையின் மரணத்தை விட, ஒப்பாரிப் பெண்களின் ஒப்பாரிப் பாடலின் நயம்தான் அதிகம் ஈர்த்தது.

"மதுரைக் குடித்தனத்தை ஒளிச்சுப் புட்டு, இங்கனவே வளவுக்கு வந்துடுங்க. உள்ளார அனுமதிக்க மாட்டாஹ. அதுக்காக உங்க ரெண்டு பேரையும் உதறவும் ஏலலை. வாசல் ஓரமா தோட்டக்காரனுக்கும், காவக்காரனுக்கும் அவுட்அவுஸ் மாதிரி ஒரு பெரிய ரூம் போட்டிருக்கோம். அடுப்படி, டாய்லட் எல்லா வசதியும் உண்டு. சொத்துக்கு ஆசைப்படுறவுகளா தெரியலை உங்களைப் பார்த்தா. பிள்ளையை நிர்க்கதியா விட மனசில்லை. உங்க வீட்டு மனுசங்களை விட்டுப்புட்டு வர்றீஹன்னா, நான் முழு மனசோட இங்கனயே குடித்தனம் வெச்சுக்குடுக்கறேன்."

அன்று முதல் கதிரேசனின் பயணம் காரைக்குடி நோக்கி நகர்ந்தது.

தெய்வானைக்கு நெஞ்சுரம் அதிகம். சிதம்பரம் தவறியதும், அதிகம் போனால் ஒரு மாதம் நிர்க்கதியாக

---

"தெருவில் எல்லாரும் சேர்ந்து எதிர் வீட்டுக்காரிக்கு ஏதோ பட்டம் தரப் போறாங்களாமே!"

"ஆமாம். 'கலகமாமணி' பட்டம்!"

- பர்வதவர்த்தினி



# கேமரா கோணம்!



* யோகாவுடன் ஜெயகாந்தன்

"ஏவி.எம். நிறுவனத்தில் கே.ஆர். விஜயாவை நடிக்க வைத்து ஒரு படம் எடுக்கத் திட்டமிட்டோம். அவரது புகைப் படங்களைப் பார்த்து, நேரில் வரவழைத் தோம். அவர் ''ஏற்கெனவே உங்கள் நிறுவனத்துக்கு என் ஃபோட்டோக்களை அனுப்பி வாய்ப்புக் கேட்டிருக்கிறேன். ஆனால் நிராகரிக்கப்பட்டேன்!'' என்றார். உடனடியாக, அவர் அனுப்பிய ஃபோட் டோக்களைத் தேடி எடுத்துப் பார்த்தால்... யாருமே அவருக்கு வாய்ப்புத் தர மாட்டார்கள். அந்த மாதிரி இருந்தது அந்த ஃபோட்டோ.

''ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட கோணத்தில் அழகாக இருப்பார்கள். அந்தக் கோணம் எது என்று கண்டுபிடித்து, படம் எடுப்பதுதான் ஒரு ஃபோட்டோ கிராபரின் திறமை. 'யோகா' அந்த விதத்தில் கெட்டிக்காரர்.''

- யோகாவின் 'அன்பெனும் தோட்டத்திலே' புத்தக வெளியீட்டு விழாவில் ஏவி.எம். சரவணன்

விக்கித்து நின்றிருப்பான். ஆடிட்டரின் உதவியுடன் எல்லாச் சொத்துக்களுக்கும் பட்டியல் போட்டான். உயில் என்று பிரமாதமாக எதுவும் இல்லை என்றாலும், மதுரையில் உள்ள வள்ளி மெடிகல்ஸ் கடையையும், நாகர்கோவில் ரப்பர் எஸ்டேட்டின் ஒரு பகுதியும், தம் காலத் திற்குப் பிறகு கதிரேசனைச் சென்றடைய வேண்டும் என்ற சட்ட வார்த்தைகள் தாங்கிய சிறிய உயில் ஒன்று மட்டும் இருந் தது. தெய்வானை சலனப்படவில்லை. பத்திரத்தை, பத்திரமாக எடுத்து வைத் தாள். ஆடிட்டர், மற்றும் எல்லா நிர்வாகச் சிப்பந்திகளையும் அழைத்து நிலைமையை ஆராய்ந்தாள். நம்பிக்கையான ஊழியர் கள் இருந்தனர். தெய்வானை ஆச்சி தனது எஸ்.எஸ்.எல்.ஸி. படிப்பையும், ஊழியர் களின் நம்பிக்கையையும் பலமாகக் கொண்டு, களம் இறங்கினாள். ஆறுமாதம் தலையை பிய்த்துக் கொண்டு ஓடிவிட லாமா என இருந்தது. பின்னர் தெளி வடைந்து நிர்வாகிக்க ஆரம்பித்த தெய் வானை, மூத்தவன் அழகப்பன் தலை யெடுக்கும் வரையில் ஓயவில்லை.

கதிரேசனுக்கு வயதும், கயறிவும் அதிகமாக அதிகமாக, தான் யார் என்பது புரிய ஆரம்பித்தது. தெய்வானை பேதம் பாராட்டவில்லை. ஆனால் பிள்ளைகள் வேற்றுமை பாராட்டின. சிறு விஷயங்கள் என்றாலும், கதிரேசன் வயதொத்த தெய் வானை ஆச்சியின் கடைசிப் பிள்ளை நாகப்பனுக்கும் கடைசிவரையில் ஒத்துப் போவே இல்லை. கிரகக் கோளாறா, பிறந்த நேரம் மோசமானதா தெரிய வில்லை. கதிரேசனின் இன்னல்கள் குறைவதாக இல்லை. அவனுடைய பதினாறாவது வயதில், பன்னிரண்டாவது வகுப்பு படித்துக் கொண்டிருக்கும் பொழுது, அவன் தாயார் கனகமும் நோய் வாய்ப்பட்டு இறந்து போனாள். அவ னுக்கு ஆறுதல் அளிப்பதற்குத் தமிழையும், தெய்வானை ஆச்சியையும் தவிர, யாரும் இல்லாமல் போயினார்.

அதனால்தான் அவன் தன் உயிரினும் மேலாகக் கருதும் பழனியப்பன் சாரையும், அவர் மூலம் அறிமுகமான இலக்கிய உலகையும் மறக்காமல் இருக்கிறான். மோசமாய் மனதைப் பாதிக்கும் விஷயங் கள் நடைபெறும்பொழுது அவருடன் பேசி சமாதானம் அடைவான். பழனி யப்பன் சாரின் பெண் தாமரை, அவ னுடைய கூடுதல் அபிமானம்.

''வாங்க'' என வரவேற்ற தாமரையின் முகத்தில் அவனுக்கு மட்டும் தெரியும் நாணத்தின் அலைகளை இனம் காண முடிந்தது.

(தொடரும்)

# பிட்டா படிங்க!

**தி**ருச்செந்தூர் தொகுதி தி.மு.க. வேட்பாளர் ராதிகா செல்வியை விட, அவரது மகன் குட்டிப் பண்ணையாருக்கு ஏக வரவேற்பைக் கொடுத்து விட்டார்களாம் தொகுதிவாசிகள். முந்நூற்றைம்பது தங்கச் சங்கிலிகளையும், நானூறு மோதிரங்களையும் தொகுதி மக்களிடம் அன்பளிப்பாகப் பெற்று அசத்தியிருக்கிறாராம் குட்டிப் பண்ணையார்!

**சு**தர்சன நாச்சியப்பன், அகில இந்திய காங்கிரஸ் செயலாளராக நியமிக்கப்பட்ட செய்தி, காங்கிரஸ் அலுவலக பியூன் சொல்லித்தான் தெரியுமாம்!

**வெ**ளியூர் பிரசாரங்களின் போது பயங்கர பிஸி என்றாலும், அதிகாலை வாக்கிங், மற்றும் ஒரு மணி நேர யோகாவுக்கும் நேரம் ஒதுக்கினாராம் வைகோ! 'இப்போதெல்லாம் தலைவர், உடல் நலத்தில் அதிக அக்கறை காட்டுகிறார் என்கிறார்கள் ம.தி.மு.க.வினர்!

**ஜி.கே.**வாசன் கையில் இரண்டு மொபைல் ஃபோன்கள். தமிழகத்துக்கு ஒன்று. டெல்லிக்கு ஒன்று. டெல்லி ஃபோன் மட்டுமே எப்போதும் 'ஆனி'ல் வைத்திருக்கிறாராம்.

**தி.மு.க**விலிருந்து அ.தி.மு.கவுக்குத் தாவியிருக்கிற கே.எஸ்.ராதாகிருஷ்ணன், கோவில்பட்டியிலும், திருச்செந்தூரிலும் முதியோர் இல்லங்களைத் திறந்திருக்கிறார். இன்னும் மூன்று இடங்களில் இல்லங்களைத் திறக்கப் போகிறாராம்.

**த**மிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி வர்த்தகப் பிரிவுத் தலைவர் வசந்தகுமாரை, டெல்லித் தலைவர்கள் 'ரஜினிகாந்த்' என்றுதான் அழைக்கிறார்களாம்.

- ஏக்ஜி, கௌசி


• வாசன்


• ராதாகிருஷ்ணன்


• வைகோ


• வசந்தகுமார்


• சுதர்சன நாச்சியப்பன்

• படம்: ராஜன்



**மேஷம்:**

திடீர்னு பொழிஞ்சு, தமிழக மக்களைக் குளிர்விச்ச கோடை மழை மாதிரி, உங்க காட்டுலேயும் திடீர் அதிர்ஷ்ட மழை அடிக்கும். குறிப்பா, உத்தியோகஸ்தர்களுக்கு உற்சாகமான சூழ்நிலை நிலவும். மாணவர்களுக்குத் துணிவும் நம்பிக்கையும் அதிகரிக்கும். சுயதொழில் வியாபாரிகளின் தொழில் முயற்சி அனுகூலம் தரும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும்.



**ரிஷபம்:**

'புறப்பட்டடா, தம்பி புறப்பட்டடா!' ரஜினி கேஸட்டுக்கு, கிடைத்துள்ள மவுசுக்குச் சமமாக, உங்கள் கலைக்கும், திறமைக்கும் மதிப்பு ஏற்படப்போகுது. உத்தியோகத்தில் அனுகூலமான திருப்பம் உண்டாகும். உற்சாகமான மனநிலை, ஆரோக்கிய மேன்மை, குடும்பத்தில் ஒற்றுமை என நிறைவான பலன்களாகவே இருக்கும்.

# நடக்குமென்பார்



**மிதுனம்:**

குரு பார்வை ரொம்ப தீர்க்கமா இருக்கிறதனாலே சுபமங்கள காரியங்கள் சுலபமா நிறைவேறும். புதிய சொத்து சேர்க்கை நிகழும். நீங்கள் நீண்ட நாள் திட்டம் போட்டு வைத்திருந்த குல தெய்வப் பிரார்த்தனை, பூஜை, புனித ஸ்தல பயணம் போன்றவை நிறைவாக நடந்தேறும். பெண்களின் உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படலாம். உஷார்!



**கடகம்:**

இரும்பு, இயந்திரம், எலக்ட்ரானிக்ஸ், காண்ட்ராக்ட்ஸ் போன்ற தொழில்கள் லாபம் கொட்டும். மனை, நிலம், ரியல் எஸ்டேட் ஆகிய இனங்களைச் சேர்ந்தவர்கள் அளவோடு நலம் அடைவார்கள். அரசியல்வாதிகள் புதிய திருப்பம் காண்பார்கள். பெண்களின் எண்ணம் நிறைவேறும். மாணவர்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.



**சிம்மம்:**

உடன்பிறந்தவர்கள் உதவ, முக்கியஸ்தர்கள் ஆதரவு தர, நினைத்ததையெல்லாம் சொடுக்குப் போடும் நேரத்தில் சாதித்து முடிக்கப் போகிறீர்கள். திருமணம் ஆகாதவர்களுக்கு அதற்கான வாய்ப்பு ஏற்படும். சொத்து விவகாரம் அனுகூலமாகும். மக்களால் மகிழ்ச்சி உண்டாகும். சுயதொழிலில் எதிர்பார்த்த பண உதவி வந்து சேரும். மாணவர்கள் பயணங்களால் ஆதாயம் அடைவார்கள்.



சச்சின் டெண்டுல்கருக்கு (ரிஷபம்) உற்சாகமான வாரமாம்.



**கன்னி:**

இதுவரை இருந்து வந்த பணநெருக்கடி குறையும். 2ல் கேது, 8ல் ராகு இருப்பதால் பேச்சில் கடுமை கூடாது. காரியங்களை நிதானமாகச் செய்யவும்.

புதிய பொருள் சேர்க்கை, ஆரோக்கிய மேன்மை, எதிர்பாராத இனிய சந்திப்பு என பெண்களுக்கு நல்ல பலன்கள் நடக்கும். சட்டம், காவல், இராணுவம் துறையைச் சேர்ந்தவர்கள் வளம் பெறுவது உறுதி.



**துலாம்:**
உங்கள் கிரக சஞ்சார நிலைமை மிகவும் அனுகூலமாக இருப்பதால், வாரம் முழுக்க 'ஜம்' என்ற பலன்களே நடக்கும். உத்தியோகத்தில் புதிய திருப்பங்கள் உண்டாகும். உயர் அதிகாரிகளின் பாராட்டு கிடைக்கும். வெளிநாட்டுத் தொடர்பு ஆதாயம் தரும். பெண்களுக்கு எதிர்பார்த்த நல்ல செய்தி வரும். அரசுப் பணியாளர்கள் மேன்மை பெறுவார்கள்.

# நடக்கும்!



**விருச்சிகம்:**
உடன் பிறந்தவர்களால் ஒரு சில பிரச்னைகள் ஏற்படும். தாமே விலகும். குறிப்பாக, உறவுக்குள்ளே இருந்து வந்த விரோதமான மனப்பான்மை விலகி, சந்தோஷமும் ஒற்றுமையும் ஏற்படும். மாணவர்களின் உழைப்பும் திறமையும் வீண் போகாது. அலுவலகத்தில் எதிர்ப்புகள் மறையும். அரசியல்வாதிகள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.



**தனுசு:**
குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும் என்பது முக்கியச் செய்தி. உத்தியோகஸ்தர்கள் வெற்றி மேல் வெற்றி காண்பார்கள் என்பது அடுத்த செய்தி. இது போதாதா? இந்த வாரத்தை மகிழ்ச்சியுடன் கழித்து

## மே 12 முதல் 18 வரை

விடலாமே! பெண்களின் எண்ணம் நிறைவேறும். புத்தகம், எழுத்து, பத்திரிகை துறையைச் சேர்ந்தவர்களுக்கு கொண்டாட்டமான காலம். ஏற்றுமதி இறக்குமதி ஆதாயம் தரும்.



**மகரம்:**
குடும்பஸ்தானத்தை குரு பார்ப்பதால் சுபமங்கள காரியங்கள் நிறைவேறும். சிலருக்குப் புதிய வீடு கட்டவோ, வாங்கவோ சந்தர்ப்பம் கூடி வரும். பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கை, பண வரவு, தெய்வீக ஈடுபாடு போன்றவை உண்டாகும். வியாபாரிகள் நிம்மதிப் பெருமூச்சு விடுவார்கள். தொழில் போட்டி, பொறாமை விலகும் தனவான்களின் ஆதரவு பெருகும்.



**கும்பம்:**
திருமணம் ஆகாதவர்களுக்கு, கெட்டிமேள வைபவம் கை கூடி வரும். இதுவரை, கோர்ட்டு கேஸு என்று அலைந்து கொண்டிருந்தர்கள், 'அக்கடா' என்று உட்காரலாம். மாணவர்களுக்கு வெற்றிக்கனி எளிதில் கிட்டும். ரசாயனம், மருத்துவம், தோல், எண்ணெய் வகை தொழில்கள் அதிக லாபம் தரும்.



**மீனம்:**
ராசிநாதன் குருபகவான், 6ம் இடத்தில் மறைந்து சஞ்சாரம் என்பதால் சில பிரச்னைகள் தலை தூக்கும். மன அமைதி இழக்க நேரிடும். தெய்வ பலத்தை அபிவிருத்தி செய்து கொள்வது நல்லது. அகலக் கால் வைப்பது கூடாது. எடுத்த காரியங்களில் தாமதம் ஏற்படும். வீண் பதற்றம் தேவையில்லை. அலுவலகத்திலும் வெளியிடத்திலும் அனுசரித்துப் போகவும்.



எத்தனை ஆண்டுகள் பழைமையோ, அத்தனை அதிக விலை கிடைக்கும் ஒயினுக்கு. இது சினிமாக் கதைக்கும் பொருந்தும் என்று கண்டு பிடித்திருக்கிறார், இயக்குனர் கே.எஸ்.ரவிகுமார். நண்பனின் வேண்டுகோளுக்கு இணங்கி, ரவுடியாக நடிக்கிறார் மாதவன். குட்டு உடையும் போது அவர் சந்திக்கும் பிரச்னைகள் என்ன என்ற ரீதியில், ஜெய்சங்கர் காலத்துக் கதையைத் தேர்வு செய்திருக்கிறார் இயக்குனர்.

இயக்குனரின் வெற்றிச் சூட்சுமம் திரைக்கதையில் ஒளிந்து கொண்டிருக்கிறது. முதல் பாதியில் நகைச்சுவையை நம்பியும், பிற்பாதியில் காதல், ஆக்ஷன் கலந்த மசாலாவை பிடித்துத் தொங்கியும், விறுவிறுப்பான ஜிகினா திரைக்கதை அமைத்து, படத்தை ஃப்ரெஷ்ஷாக நகர்த்திக் காட்டுகிறார்.



# எதிரி

பயந்த சுபாவம் கொண்டவர் போல காட்டப்படும் மாதவன், திடீரென்று காய்கறிச் சந்தையில் ரவுடிகளைப் பந்தாடுவது. போலீஸ் வில்லன், தாதா வில்லன் இருவரையும் கொன்றுவிட்டு, பட்டாக் கத்தியையும், கைத் துப்பாக்கியையும் இறந்துபோன இருவரது கரங்களில் இடம் மாற்றி வைப்பது போன்றவை, படத்திற்குக் கூடுதல் நகைச்சுவைக் காட்சிகள் என்றால், என்கவுன்டருக்காக அழைத்துச் செல்லப்படும் மாதவன் தப்பிக்க வசதியாக, மாணவர்கள் அலைஅலையாக அணிவகுத்தபடி வந்து கொண்டேயிருக்கும் அந்தக் காட்சி ஜிலீர்.

மாதவன், சதா இருவரைக் காட்டிலும் டெல்லி கணேஷ், கனிகா, ரகுமான் ஆகிய மூவரும், நடிப்பில் அதிக வாக்குகளை அள்ளி விடுகிறார்கள். நிற்க; டெல்லி கணேஷ் பாத்திரத்தை ஓர் ஏமாந்த சோணகிரியாக கொஞ்சம் அதிகமாகவே காட்டுவதால், அவர் சார்ந்திருக்கும் சமுதாயத்தை நக்கலடிப்பது போன்ற உணர்வு ஏற்படுவதைத் தவிர்த்திருக்கலாம். பகுத்தறிவு ஜோக்குகளிலிருந்து, பாலியல் ஜோக்குகளுக்கு எம்பிக் குதிக்க முயற்சி செய்யும் விவேக், தமது நிலைப்பாட்டை மறுபரிசீலனை செய்தால், அவருக்கும் திரை நகைச்சுவைக்கும் நல்லது.

எதிரி - பழைய ஒயின், புதிய பாட்டில்.

**- விஷுவல்தாசன்**

● ஆவரேஜ்

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-2004



*படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!*

**முதல் பரிசு - ரூ. 10,000**
**இரண்டாம் பரிசு - ரூ. 7,500**
**மூன்றாம் பரிசு - ரூ. 5,000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

எழுதுபவர்கள் முப்பத்தைந்து வயதுக் குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்க மானவை.

**விதிமுறைகள்:**

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுது வதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட் பட்டவர்தான் என்பதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. ஜெராக்ஸ் போன்ற) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை. ஒருவரே எத்தனை கதை கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலை பேசி விசாரிப்புகளோ கூடாது.
- 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2004' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 1 ஆண்டு மலரில் வெளி யாகும்.

*படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக் கிறோம்.*

– ஆசிரியர்

# போர்க் களத்தைப் பார்வையிடுங்கள்!

பேராசிரியர் ப. இராம்கோபால்

தேர்வு என்பது ஒரு போர்க்களம். கேள்விகள் உங்கள் எதிரிகள். நீங்கள்தான் போர்த் தளபதி. ஒரு சிறந்த தளபதி போரைத் தொடங்குமுன்பு, போர்க்களம் முழுவதையும் 'சர்வே' செய்வார். பின்பு, எந்தெந்த எதிரிகளை எப்படி வீழ்த்த வேண்டும் என்று திட்டமிட்டுச் செயலில் இறங்குவார். இந்தச் சிறந்த தளபதியைப் போல, நீங்களும் போர்க்களத்தில் 'என்ன இருக்கிறது' என்று முழுமையாகத் தெரிந்து கொள்ளுங்கள். கேள்வித் தாளை முழுவதுமாக ஒன்றிரண்டு முறை படியுங்கள். என்ன வகையான கேள்விகள் கேட்கப்பட்டிருக்கின்றன, அவற்றிற்கு என்ன மதிப்பெண், எழுத எவ்வளவு நேரம் செலவாகும், என்றெல்லாம் கணக்கிடுங்கள்.

இனி எந்தெந்தக் கேள்விகளுக்கு விடையளிக்க வேண்டும் என்று முடிவு செய்ய வேண்டும். இதற்கு 'திட்டமிடல்' என்று பெயர். முடிவு செய்த பின்பு, எந்தக் கேள்வியை முதலில் எழுதுவது, அடுத்து எந்தக் கேள்விக்கு பதில் எழுதுவது என்று முடிவு செய்ய வேண்டும். இராணுவ மொழியில் இதற்கு 'Strategy' என்று பெயர். 'Strategy'யைச் சரியாகச் செய்யாத தளபதி, வெற்றி பெற்றதாகச் சரித்திரமில்லை.

மிகச் சிறந்த மதிப்பெண் பெற்றுத் தேற விரும்பும் மாணவர்கள், பிற மாணவர்கள் விடையெழுதும் சராசரிக் கேள்விகளைத் தவிர்த்தல் நல்லது.

எந்தெந்தக் கேள்விகளுக்குப் பதில் அளிப்பது என்று முடிவு செய்த பின்பு, விடைகளை எழுதத் துவங்குங்கள். கேள்வித் தாளில் கேள்விகள் இருக்கும் வரிசையிலேயே விடையளிக்க வேண்டும் என்று எந்தச் சட்டமுமில்லை. அதே சமயம், ஒரு கேள்வியில் துணைக் கேள்விகள் இருந்தால், அனைத்துத் துணைக் கேள்விகளுக்கும், ஒரே பக்கத்தில் ஒன்றன்பின் ஒன்றாக விடைகளை எழுதுங்கள். ஏதாவது ஒரு துணைக் கேள்விக்குப் பதில் தெரியவில்லையானால், அதற்கென்று சற்று இடத்தை ஒதுக்கிவிட்டு, பிறகேள்விகளுக்கு விடை எழுதுங்கள். முதல் பக்கத்தில் முடிந்தவரையில் அடித்தல்/திருத்தல் இல்லாமல் எழுதுங்கள். First impression is the best impression அல்லவா?

விடைகளை எழுதும்போது, கேள்வியின் எண்ணையும், உட்பிரிவுகளின் எண்ணையும் (a, b, c, d, e) தவறாமல் தெளிவாகக் குறிப்பிட வேண்டும். ஒவ்வொரு கேள்வியையும் எழுதி, அடிக்கோடிட்ட பின்பே, பதில்களை எழுதுவது மிகச் சிறந்த முறை (கேள்விகள் சுருக்கமாக இருந்தால் மட்டுமே இதைச் செய்ய வேண்டும்) Multiple choice கேள்விகளுக்கு 2-பீ என்றோ, கோடிட்ட இடங்களை நிரப்புக - வகைக் கேள்விகளுக்கு விடையை மட்டுமோ எழுதுவது, தவறான முறை. இப்படி பதில் எழுதினால், விடைத்தாள் திருத்துபவர் ஒவ்வொரு கேள்விக்கான விடையையும் சரிபார்க்க, கேள்வித்தாளைப் புரட்ட வேண்டும். இப்படி ஒரு பத்து முறை அவரை அலைக்கழிக்க வைத்தீர்களானால், அவருக்குச் சலிப்பும், எரிச்சலும் ஏற்படும். அதன் விளைவு உங்களுக்கு நன்மை பயக்காது.

'விடைத்தாள் திருத்துபவர் எரிச்சல் ஏற்படும்படி செய்யாதீர்கள். அவரைக் கவர்ந்து, உற்சாகமான மனநிலையில் அவர் இருக்கும்படி பார்த்துக் கொண்டால், உங்களுக்குத்தான் இலாபம். அதற்கான சில டிப்ஸ்.

# மார்க் வாங்கலாம் வாங்க 18

1. முதல் பக்கம் ஒழுங்காக, கண்ணில் ஒற்றிக் கொள்கிற மாதிரி இருக்க வேண்டும்.



• படம் : ஸ்ரீஹரி

2. தவறான பதில்களை ஒரு ஸ்லேண்டிங் (/) கோடு போட்டு மட்டும் அடித்தால் போதுமானது X#@ இப்படியெல்லாம் கோடுகளைக் கிழிக்காதீர்கள். கோலங்கள் போட்டு, விடைத்தாளை அலங்கோலமாக்காதீர்கள்.

3. overwriting செய்யாதீர்கள். தவறான வாக்கியத்தை எழுதியிருந்தால் அவற்றை அடிக்க ஒரே ஒரு படுக்கைக் கோடு (-) மட்டும் போடுங்கள்

4. கேள்வியின் எண்கள், உட்கேள்விகளின் எண்கள் ஆகியவற்றை எழுத வண்ண sketch பேனாவைப் பயன்படுத்துங்கள்.

5. கேள்விகளையும், பதில்களின் முக்கியப் பகுதிகளையும் வண்ண sketch பேனாவால் அடிக்கோடிடுங்கள்

6. படங்களைத் தெளிவாகவும், சுத்தமாகவும் வரையுங்கள்.

தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் சமையல் கலை வகுப்புகளைப் பார்த்திருப்பீர்கள். சமையல்காரர் ஒரு தட்டில் சமைத்த பதார்த்தங்களை மிக அழகாக வைப்பார். அதைச் சுற்றி கொத்துமல்லி, வெங்காயம், காரட் போன்ற பொருட்களை அழகாக அடுக்கி வைப்பார், அடுத்தபடியாக, இந்த வண்ண வண்ணப் பொருள்களும், அவற்றை அடுக்கி வைத்திருக்கும் முறையும், மனதைக் கொள்ளை கொண்டு, வாயில் எச்சில் ஊற வைத்து, வயிற்றில் பசியைத் தூண்டும். இப்படி இருக்க வேண்டும். உங்கள் விடைத்தாள்கள். விடைத்தாள் திருத்துபவருக்கு அறுசுவை உணவு படையுங்கள்; அவரை அரைப் பட்டினி போடாதீர்கள்!

இதையெல்லாம் செய்ய வேண்டுமானால், தேர்வுக்கு நாம் முழுமையாய்த் தயாரித்துக் கொண்டு போக வேண்டும்.

ஆண்டு முழுதும் படித்து, தினம் தினம் படித்ததை நினைவூட்டிக் கொண்டால், அமைதியோடும் உற்சாகத்தோடும் தேர்வறைக்குள் நுழையலாம்.

ஞாபகமிருக்கட்டும், இந்தப் போர்க்களத்தில் நீங்கள்தான் தளபதி! ஐந்து நிமிடம் தியானம் செய்து மனத்தை ஒருமுகப்படுத்திக் கொண்டு களமிறங்குங்கள்.

(தொடரும்)

17.3.1995

கிராமத்திலிருந்த தென்னந் தோப்பை அப்பா விற்றார். அந்த வழியாகப் பஸ்ஸில் போகும் போதெல்லாம், என் நண்பர்களிடம் தோப்பைக் காட்டி பெருமையடித்துக் கொள்வேன். இனி ஜன்னல் ஓரம் ஸீட் கிடைக்கவில்லையென்றாலும் வருத்தப்பட மாட்டேன். தோப்பு போனதில் எல்லோரும் வருத்தம் அடைந்திருப்பார்கள். அப்பாவும், அம்மாவும் 'போற போது என்ன கொண்டு போகப் போறோம்?' என்றும், அண்ணன், "வேற வழி இல்லை. தட்ஸ் ஆல்" என்றும் பேசி, வருத்தத்தை மறைத்துக் கொண்டார்கள். அக்கா இரண்டு நாள் சரியாகவே சாப்பிடவில்லை.

இனி அக்காவிற்கு நகைகள் தயாராகி விடும்.

18.3.1995

அண்ணனுடன் பேசியதில் அவனது மனதைப் புரிந்து கொள்ள முடிந்தது. அவனது காலத்திலாவது, நடுத்தரவர்க்க இனத்திலிருந்து ஒரு செ.மீ. அளவாவது குடும்பத்தை முன்னேற்ற கனவு கண்டிருக்கிறான். வாய்த்ததோ எல்.டி. கிளார்க் வேலை. தோப்பின் நடுவே சிறிய வீடு கட்டி இருக்க வேண்டும் என்ற கனவும் தொலைந்தது. 'நீயாவது ஒழுங்காப் படிடா...' என்றான் என்னிடம்.

20.6.1996

நான் சிகரெட் குடித்ததை அக்கா இன்று பார்த்து விட்டாள். அவளை அப்பாவின் அந்தரங்கக் காரியதரிசி என்றுதான் சொல்ல வேண்டும். கூடுதலாக ஒற்றுப் பணியும் மேற்கொண்டிருந்தாள். முடிந்தவரை கெஞ்சிப் பார்த்தேன். அவளைக் காலேஜிற்கு அழைத்துச் செல்லுதல், தோழிகளிடம் புக்ஸ் வாங்கி வருதல், மருதாணி பறித்து வருதல் போன்ற பணிகள் பாதிக்கப்படலாம் என்று எச்சரித்தேன்.

"போடா."

"போடி."

அப்பா என்னை இரண்டு அறைகள் மூலம் திருத்தி விட முயன்றார். புகை பிடிப்பதால் அதிகம் பாதிக்கப்படுவது நுரையீரலே, என்ற அணிக்குத் தலைமை தாங்கி அரைமணி நேரம் பேசினார். அக்காவைப் பழிவாங்க வேண்டும். அவள் என்னைப் பார்த்து வெற்றிப் புன்னகை சிந்தியதற்கு, 'உனக்கு ராட்சசியான ஒரு மாமியார் வரட்டும்' என்று சபித்தேன். 'லாரியின் பின்னால் காலிக் குடத்துடன் அரை மணி நேரம் சண்டை போடக்கூடிய ஊரில் வாழ்வாயாக' என்றும் ஒரு கடும் சாபம்.

"போடா ஒல்லிக்குச்சி!"

28.8.1996

அண்ணனுக்கும், அக்காவுக்கும் இன்று சண்டை. 'கூட வேலை பார்ப்பவளின் தங்கை - கல்யாணியை விட வயசு குறைவு - பாங்க் எக்ஸாம் பாஸாகி விட்டாள். இவள் வேளா வேளைக்குத் தின்பதில் போட்டி வைத்தால் ஜெயித்து விடுவாள். டீ.வி. சீரியல் பார்த்து தூங்கி எழுவதுதான் வாழ்க்கை என்று நம்பிக் கொண்டிருக்கிறாள். போடி, போ.. டீவியில் ஒளியும், ஒலியும் போடுகிறான், அறிவைப் பெருக்கிக் கொள். வந்து

# என் புகைப்படத்தில் இருப்பவர்கள்...



வாய்த்தது பார் நமக்கு' என்று.

உடனே பாங்க் எக்ஸாமிற்கான புத்தகங்கள், பொது அறிவுப் புத்தகங்கள் என்று வாங்கி வந்து விட்டான். படிக்கச் சொல்லிப் போயிருக்கிறான். அடிக்கடி கேள்வி கேட்பானாம்.

*30.10.1996*

மொட்டை மாடியில் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். நிலா வெளிச்சம். அண்ணனும், அக்காவும் என்னைக் கேலி செய்தார்கள். நான் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவன் இல்லையாம். அண்ணன், அக்கா இரண்டு பேர்தானாம். சினிமா இடைவேளை நேரத்தில் ஒரு சின்னக் குழந்தை யாரோ விட்டுச் சென்றிருக்கிறார்கள். பரிதாபப்பட்ட அப்பாவும், அம்மாவும் அந்தச் சிசுவை எடுத்து வளர்க்கிறார்கள்.

அதுதான் நான்.

"பதினெட்டு வருஷத்துக்கு முன்னாடி இதுதான் நடந்தது. அத இப்ப உங்கிட்ட சொல்ல வேண்டிய காலம் வந்திருச்சு..." என்றான் அண்ணன்.

"அது என்ன படம்டா?" என்றாள் அக்கா.

"வசந்த மாளிகையோ, பாரத விலாஸோ..."

"நாளைக்குக் காலைல நீ இங்க இருக்கக் கூடாது. உன்னோட உண்மையான அப்பா, அம்மாவைத் தேடி ஓடிரு..." என்றாள் அக்கா. "போனாப் போகுது, என் கல்யாணச் சாப்பாடு சாப்பிட்டுட்டுப் போ..."

சின்ன வயதில் இதெல்லாம் உண்மை என்றே நம்பியிருக்கிறேன். அழுது விடுவேன்.

இப்போது சிரிப்புதான் வருகிறது. என்றாலும் அவர்கள் சந்தோஷப்பட சிணுங்கி வைத்தேன்.

1.7.1997

சட்டென அக்காவிற்குத் திருமணம்

ஷங்கர் பாபு

நிச்சயமாகி விட்டது. அண்ணன் அப்போது பூனாவில் இருந்தான். ஃபோனில் செய்தி கேட்ட அவனுக்கு அதிர்ச்சியாகி விட்டது. அவனிடம் ஏன் சொல்லவில்லை; ஒரு விவரமும் தெரியாமல் செய்து விட்டீர்கள்; என்னிடம் ஆலோசனை கேட்கவில்லை; நான் உயிரோடு தானே இருக்கிறேன் என்றெல்லாம் கத்தினான்.

நிச்சயதார்த்தத்திற்கு வர மாட்டான் என்றுதான் நினைத்தோம். அன்று காலையில் வந்து விட்டான் பயணக் களைப்போடும், எரிச்சல் தாடியோடும், கோபத்தோடும்.

அக்காவின் விருப்பத்தோடுதான் கல்யாணம் நடக்கிறது என்று அவனா




கவே நம்பிய பிறகுதான், அவனிடம் சிரிப்பு வந்தது.

அக்காவை மாப்பிள்ளை வீட்டில் விடப் போகும் போது நான் அழுது விட்டேன். அக்காவும் என்னைப் பார்த்துப் பார்த்து அழுதாள். அண்ணன் ரகசியமாய்க் கண்களைத் துடைத்துக் கொண்டான். அவன் அழ மாட்டான் என்று நான் நம்பிக் கொண்டிருந்தேன். அழாமல் இருந்த அம்மாவிடம் அண்ணன் ஏசிக் கொண்டிருந்தான். "பாவம், அது புழிஞ்சு புழிஞ்சு அழுதுக்கிட்டிருக்கு. கல் நெஞ்சுக்காரி மாதிரி, அவ அழுறதைப் பாத்து ரசிச்சுக்கிட்டு இருக்கியே..."

"நானும் அழுதா, அவ இன்னும் அழுவாடா..." என்றாள் அம்மா. வீடு திரும்பியதும் கதறி அழத் துவங்கினான்.

கண்ணாடியில் அக்கா ஒட்டி வைத்த ஸ்டிக்கர் பொட்டு இருந்தது.

8.11.1999

என்னுடன் படித்த மணிகண்டனுக்கு வேலை கிடைத்து விட்டது. அவன் பாலிடெக்னிக் படித்தவன். நான் ஆசைப் பட்ட படிப்பு அது. அதில் சேர வேண்டும் என்று எவ்வளவோ ஆசைப் பட்டேன். ஐந்தாயிரம் ரூபாய் நன்கொடை கேட்டார்கள். அப்பாவால் அதைப் புரட்ட முடியவில்லை. இரண்டு நாள் அழுது விட்டு என் நோட்டுகளில் 11-ஆ பிரிவு, கணிதப் பிரிவு என்று எழுதினேன்.

அதை நினைவுகூர்ந்து வீட்டில் இட்டினேன். அன்று நான் ஆசைப்பட்ட படிப்பு படித்திருந்தால், வேலை கிடைத்திருக்கும் என்றேன். பட்டதாரிகளுக்கு என்று வாய்த்திருப்பது சேல்ஸ்மேன், ரெப் வேலைகள் தாம். எனக்கு சரளமாகப் பேச வராது.

"அப்ப நம்ம குடும்பச் சூழல் உனக்குத் தெரியாததா? நம்ம வீடே மூழ்கற நிலைமைல இருந்தது.. மூணு பேரையும் வளத்து ஆளாக்கறதுக்குள்ள..."

"முதல்லயே யோசிச்சிருக்கணும்" என்றேன்.

14.1.2000

அண்ணனுடன் அவனது குடும்பம் வந்திருந்தது. அவனது மகனுடன் விளையாடிப் பொழுது போனது. பையனுக்கு இந்தியில் ஏதாவது சொன்னால் புரிகிறது. அண்ணன், 'உனக்கு இந்த ஜென்மத்துல எங்க வேலை கிடைக்கப் போகுது...?'' என்றான் கேலியாய். போகிற போது ஆயிரம் ரூபாயைக் கொடுத்து "உன் செலவுக்கு வச்சுக்கோ..." என்றான்.

17.1.2001

வேலை கிடைத்த சந்தோஷத்தைப் பகிர்ந்து கொள்ள, அக்காவின் வீட்டுக்குச் சென்றேன். சதை போட்டிருந்தாள்.

"உன்னோட உண்மையான பெற்றோர் யார்னு தெரிஞ்சுதாடா...?'' என்றான் சீரியஸாக.

அண்ணனின் மகனும், அக்காவின் இரண்டாவது குழந்தையான ப்ரியாவும் ஒன்றாக விளையாடிக் கொண்டிருந் தார்கள்.

''அந்தப் பொண்ணு, மாமா பையன்னு அதுக மனசுல வேண்டாத தைக் கிளப்பி விட்றாதீங்க..'' என்று அண்ணன் எச்சரித்திருந்தான். உடல் ஊனமுற்ற குழந்தைகள் பிறப்பதற்கான வாய்ப்பு அதிகம் என்று சொன்ன மருத்து வர்களை விட, நாம் நம்மைப் புத்தி சாலிகளாகக் காட்டிக் கொள்ள வேண் டாம்.

அக்கா யாரிடமோ பேசிக் கொண்டிருந்தாள். ''என் தம்பியோட ஜாதகம் கொடுத்து விடறேன். சீக்கிரம் பதில் சொன்னா நல்லது. நிறைய அலை யன்ஸ் வந்துக்கிட்டு இருக்கு..''

20.2.2001

பூனாவுக்குச் சென்று அண்ணனி டம் அழைப்பிதழ் கொடுத்தேன். வாழ்த்தினான். டிக்கெட் ரிசர்வேஷன் பற்றி அண்ணி யிடம் பேசிக் கொண்டிருந்தான்.

அண்ணி பொறுமைசாலி. வேலையில் லாமல் நான் இங்கு இருந்த சில மாதங் களில், என்னை நல்லபடி கவனித்துக் கொண்டாள்.

26.3.2003

என் மகனுக்கு ஒரு வயது பிறந்த நாள். எல்லோரும் வந்து விட்டார்கள். விதவித மான பரிசுகள், வாழ்த்துகளில் என் மகன் ரிஷி திணறிக் கொண்டிருந்தான். கேக் வெட்டினான். சிலரைப் பார்த்துச் சிரித் தான்; சிலரிடம் அழுதான். அக்கா அழகான தங்கச் சங்கிலி போட்டாள். அண்ணன் ஐந்தாயிரம் ரூபாய்க்கு ஒரு பாண்ட் எடுத்துக் கொடுத்தான். ஃப்ளாஷ்கள் மின்னின.

தங்கச் செயின், ப்ரேஸ்லெட், வளை யல், இடுப்பில் சங்கிலி, கொலுசு என்று ஜொலித்த குழந்தையைப் பார்த்து 'ஒரு ஜுவல்லரிக் கடையே உம் பையன் வச்சி ருக்கானே...'' என்றான் அண்ணன்.

27.3.2003

ரிஷிக்கு திருச்செந்தூரில் மொட்டை போட்டோம். எல்லோரும் குரூப் ஃபோட்டோ எடுத்துக் கொண்டோம். ஊருக்குக் கிளம்பும்போது 'அடுத்த குழந் தைக்குப் போதிய இடைவெளி குடுடா..' என்றான் அண்ணன். அட்வைஸ் செய் வதை விட மாட்டான் போலும்.

''இல்லண்ணே. இவன் ஒருத்தன் போதும்...''

''குட்!''

ரிஷி இப்போதே செல்ஃபோன் எடுத்து மழலை பேசு கிறான். டாட்டா போவோமா என்றால், பைக்கைக் காட்டுகிறான். கம்ப்யூட்டர் எங்கே என்றால் காட்டுகிறான். எல்.கே.ஜி.யில் சேர்க்கவே ஆயிரக் கணக்கில் ஆகும் போலிருக்கிறது.

எனக்குத் தோப்பு கூடக் கிடையாது.




**வா**ழ்க்கை ஏன் சிக்கலாகி விட்டது? எங்கள் குடும்பப் புகைப் படத்தில் நாங்கள் கும்பலாக இருப்போம். யார் முகமும் தெளிவாக இருக்காது. ஆனால் எல்லோரும் இருப்போம். ரிஷியின் ஆல்பத்தில் அவன் முகம் தெளிவாகத் தெரியும். அருகில் யாரும் இருக்க மாட்டார்கள். அவனது இழப்பு எனக்கு இப்போதே தெரிந்தது.

ஆபிஸில் நீங்கள் நன்றாகத் தூங்கிக் கொண்டிருக்கும்போது (அதுவும் லஞ்சுக்குப் பிறகு) டேபிளின் எதிரே திடீரென்று பாஸ் அவதாரமெடுத்தால், தப்பிப்பதற்கென்றே சில ரெடிமேட் வசனங்கள். ஆரம்பத்திலோ முடிவிலோ, 'ஹிஹி' கண்டிப்பாகச் சேர்க்கவும். மசியாத மானேஜரும் உண்டோ?





"போன வாரம் நடந்த டயம்-மானேஜ்மென்ட் செமினார்ல... அதான், நீங்க என்னை வலுக்கட்டாயமா அனுப்பினீங்களே... ஒரு அரை மணி தூங்கறது பவர்-நாப் அப்படின்னாங்க. அதான் ட்ரை பண்ணிப் பாத்துக்கிட்டிருந்தேன்."

"இப்படி ஒரே களைப்பா மயக்கமா வரும்னு, ப்ளட் பாங்கிலே சொன்னாங்க ஸார்"



# ஆர்ட் ஆ...



"தூங்கறதாவது... மெடிடேஷன் ஸார். மனசை ஒருமுகப்படுத்தி டபுளா சார்ஜ் ஆகி, ஓவரா வொர்க் பண்ணத்தான் தியானம் பண்ணிக்கிட்டிருக்கேன்..."

"குனிஞ்சு கீ போர்டு இடுக்கில புழுதி இருக்கான்னு பாத்துக்கிட்டிருந்தேன்."





"உலகிலேயே ஆக்கபூர்வமான மனிதர்களின் ஏழு குணாதிசயங்களில் இதுவும் ஒண்ணுன்னு 'அந்த புத்தகத்துல' போட்டிருக்கு ஸார்"



"காப்பி சரியா டயத்துக்கு, அதுவும் சூடா குடிக்கலேன்னா இப்படித்தான் கண்ணு ஆட்டோமாட்டிக்கா மூடிக்கிது ஸார்... மாத்ருபூதம்கிட்டே காமிக்கணும்னு 'வீட்ல' கூட ஃபீல் பண்றாங்க..."



"போன வாரம் ஸ்ரீஸ்ரீ நித்ரா ஸ்வாமிஜி நடத்திய ஸ்பெஷல் க்ளாஸ் போனேன். ஸ்ட்ரெஸ் தீருவதற்கு அப்பப்போ கண்ணை மூடி யோக நித்ரா பண்ணணும்னார். ஃப்ரெஷ்ஷா இருக்குமாம். விப்ரோ, இன்ஃபோசிஸ்ஸில்கூட இதைத்தான் ப்ராக்டீஸ் செய்கிறார்களாம்..."

# ஸ்லீப்பிங்!

எல்லாவற்றையும்விட மிகவும் வொர்க்-அவுட்டான திருமந்திரங்கள்... "குட்மார்னிங்... ஆஃப்டர்நூன் ஸார்... ஸாரி ஸார்... வணக்கம் ஸார்... இனிமே ரிட்டையர் ஆகிறவரைக்கும் கண்மூட மாட்டேன், ப்ராமிஸ் ஸார்..."

வழக்கம்போல் பாஸ் உறுமி விட்டு தம் பாசறைக்குள் நுழைந்து விடுவார்.

**லதா சேகர்**





உ

அருள்மிகு ஸ்ரீபூர்ணாபுஷ்கலா ஸமேத ஸ்ரீகுருநாதஸ்வாமி துணை

## ஸ்ரீகல்யாணி அப்பன் சேர்வராயன் சேவா சங்கம்

## கீழக்கோவில் பத்து - உடையார் கோவில்



## திருப்பணி மற்றும் கும்பாபிஷேக அழைப்பிதழ்

## கும்பாபிஷேக நாள்: 30.06.2004

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகள்

ஸ்ரீமுகம் கொடுத்து 09.03.2004 கோவில் வளாகத்துக்கு விஜயமும் செய்து ஆசீர்வதித்து, தஞ்சாவூர் மாவட்டம், பாபநாசம் வட்டம், உடையார் கோவில் கீழக்கோவில் பத்து கிராமத்தில் துவங்கி நடைபெற்று வரும் ஸ்ரீபூர்ணாபுஷ்கலா ஸமேத ஸ்ரீகுருநாதசுவாமி என்கிற ஸ்ரீகல்யாணி அப்பனார் வளாக ஆறு கோவில்களுக்கான திருப்பணி வேலைகள் முடியும் தருவாயில் உள்ளன.

இதுவரை மேற்படி திருப்பணிக்காக நல்லாதரவு தந்து ஒத்துழைப்பு நல்கிய ஐயப்பப் பக்தர்கள், பொது ஜனங்கள் மற்றும் குல தெய்வமாக ஸ்ரீகுருநாதஸ்வாமி, பாலகுருநாதஸ்வாமி, வளகுருநாதஸ்வாமி, மௌனகுருநாதஸ்வாமி, சத்ஜன குருநாதஸ்வாமி, சக்திகுருநாதஸ்வாமி போன்ற பல பிரிவுகளைச் சார்ந்த தெலுங்கு அந்தணர்கள் போன்றவர்களுக்கும் சேவா சங்கம் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

மீதமுள்ள வேலைகள் முடிவுற்று காஞ்சி பீடாதிபதி முன்னிலையில் 30.06.2004ல் புதன்கிழமை அனுஷ நட்சத்திரத்தில் காலை 9 -10.30 மணி முஹூர்த்தத்தில் கும்பாபிஷேகம் நடத்திட குறைந்த பட்சம் ரூபாய் ஐந்து லட்சம் தேவைப்படுவதால் ஏற்கனவே ஆதரவு நல்கியோர் உட்பட அனைவரும் தாராளமாக நிதி உதவி செய்து தெரிந்த அன்பர்களிடமிருந்து வசூல் செய்து அனுப்பி, அருள்மிகு ஸ்ரீகல்யாணி அப்பன் அருள்பெற வேணுமாய் அன்போடு கேட்டுக் கொள்கிறோம்.

**வரைவோலை மற்றும் காசோலை அனுப்ப வேண்டிய பெயர்**

**Sri Kalyaani Appan Srevarayan Seva Sangam, Kilakovilpatthu** இந்தியன் வங்கி **(Branch Code No. A - 096)** அம்மாபேட்டை, தஞ்சாவூர் மாவட்டம், வங்கி இணைப்பு கணக்கு எண்: **5552/19**

**அனுப்ப வேண்டிய முகவரி:**

1. S. மணிபாண்டியன், தலைவர், உரிமை: ராணி பேலைஸ் தஞ்சாவூர், தொலைபேசி எண்: 04362 - 231295
2. T. பழனிவேல் பிள்ளை, செயலாளர், பெரியகுடி சேந்தமங்கலம், மன்னார்குடி தாலுகா, தொலைபேசி: 04367 - 279776
3. S. கோவிந்தராஜன், M.A.B.Ed., பொருளாளர், கீழக்கோவில்பத்து, உடையார்கோவில், தொலைபேசி : 04374 - 232105

பூஜ்யஸ்ரீ தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் ஆசீர்வதித்து ரூ. 10,000/- அளித்துள்ளார்கள். ஸ்ரீ முரளிதர் ஸ்வாமிகள் of G.K.R. Charities, Bombayயிடமிருந்து நன்கொடைகள் பெற ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

***IMPORTANT NOTE:*** ரூபாய் ஆயிரத்துக்கு மேல் (ரூ. 1,000/-) நன்கொடை அளிக்கும் அன்பர்கள் (பக்தர்கள்) பெயர்கள் கோவில் கல்வெட்டுகளில் பதிக்கப்படும்.



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப்படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

முதிய பருவத்தில் மறதி நோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

## முதியோர் சேவை பெரியது!

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

# S.V. HOME FOR AGED

## Charitable Trust (Reg)

# 50 / 88, Panchali Amman Kovil Street, Arumbakkam, Chennai - 600 106.
(Near Panchali Amman Temple) Tel. Off: 044 - 2475 5700, 2475 6700, 2475 7777, 2475 5799
e-mail:svhome@vsnl.net

## புக் போக்




### கவிதையை மீறி நின்று - 'க்ளிக்' ரவி

மேகக் கதவை தடதடவென்று காற்று தட்டிவிட்டுப் போக, அவசர மாய்த் திறந்து எட்டிப் பார்த்து மூடிக் கொள்ளும் மின்னல் போல, பளிச் சென்று மனதைப் பறிக்கும் கதைகள். புகழ், பணம், பதவி, படிப்பு, அறிவு, திறன் அனைத்துமே அடுத்தவருக்குப் பயன்தராவிடில், வெறும் குப்பைதான் என்று அழுத்தமாய்ச் சொல்லும் மனித நேயச் சிறு கதைகளின் தொகுப்பு.

**அரவிந்த அன்னை பப்ளிகேஷன்ஸ், 13, மாரியம்மன் கோயில் குறுக்குத் தெரு, மேற்கு கே.கே.நகர், சென்னை - 78. விலை ரூ.50.**

### பேசும் கலை - கு. ஞானசம்பந்தன்

'எந்த விஷயத்தில் நீங்கள் என்னுடன் மாறுபடுகிறீர்களோ, அதில் நீங்கள் பைத்தியம்' என்றார் அமரர் கல்கி. நீங்களோ, கேட்பவரோ பைத்தியமாகாமலும், நேயத்தையும் பண்பையும் மறக்காமலும், அறிவையும் அனுபவத்தையும் மகிழ்வோடு ஊட்டும் கலை பேச்சுக் கலை. நயமும், நாகரிகமும், நகைச்சுவையும் பழகிவிட்டால், சிறந்த நாவலனாகி விடலாமென்பதை அருமையாய் விளக்கும் நூல்.

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி. லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098. விலை ரூ.45.**

### விடியும் - க. அருள் சுப்பிரமணியம்

வீடு, வாசல், பிள்ளை, மனைவி அத்தனையையும் விட்டு, கட்டாயத் துறவு கொள்ள வைத்து, நாடு கடத்தி விடவும் செய்யும் கொடுமை. புலம் பெயர்ந்து, நன்றாய் வாழ்ந்தாலும், துக்கமும் ஏக்கமும் உள்ளத்தில் அக்னி ஊற்றாய்ச் சுரந்து உள்ளுக்குள் தவிக்க, யதார்த்த வாழ்வுக்குப் போராடும் வாழ்க்கைப் போராளிகளின் ஈழக்கதை, ஈரக்கதை.

**மணிமேகலை பிரசுரம், 7, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.95**

### பூரணி கவிதைகள் (1929 முதல் 2003 வரை)

'ராமனையும், வள்ளுவனையும், காந்தியையும் கூட, உயர்ந்தோர் என எண்ணமுடியவில்லை, பெண்மையை அடக்கியும், அடிமையும், படுத்தியதால்' என்று இன்று நேற்றல்ல, சுதந்திரம் பெறுமுன் பிறந்து, பெண் சுதந்திரம் பற்றிப் பேசும் பெண் கவிஞரின் அசர வைக்கும் அதிரடிக் கவிதைகளின் தொகுப்பு. பல்வேறு காலகட்டத்து வாழ்வியலை, உணர்வுக்குவியல்களை, பார்வைகளைக் கூறும் அனுபவக் கவிதைகள்.

**காலச்சுவடு பதிப்பகம், 669, கே.பி.சாலை, நாகர்கோவில் - 629 001. விலை: ரூ.60**

### எந்தக் கதவும் திறக்கும் - தொகுப்பு பி.ஜி. கதிரவன்

'இளைய தலைமுறையை உயர்த்தி விடுவதைத் தவிர உய்யும் வழி வேறில்லை; வானுயர வளர்த்துவிட்டு வாழ்த்துவது தவிர வேறு பேறில்லை' என்று, வளரும் தலைமுறைக்காக வாழ்வை அர்ப்பணிக்கும் இனம் ஆசிரியர் இனம். இந்த இலக்கணம் மாறாத அந்த இனத்திலொருவர், பூத்துக் கிடக்கும் மாணவத் தோட்டத்தில், கவி மணம் கமழும் மலர்களாகப் பார்த்து, பறித்து, பகுத்து, தொகுத்து, சரமாக்கித் தந்த படைப்பு.

**கதிரவன் பதிப்பகம், 43, நேரு நகர், போடி ரயில்வே லைன் வடபுறம், மதுரை - 625 010. விலை ரூ.50**

— விஷ்வக்



# நளினிக்குச் சொன்ன

என் கம்ப்யூட்டர் சயன்ஸ் வகுப்பில், மாணவர்களுக்குக் கடுமையான புரோகிராமிங் பணி ஒன்றைக் கொடுத்தேன்.

புரோக்ராம் சிக்கலானது. நானே அதைச் சிராக்க ஒரு வாரம் ஆயிற்று. அந்த முடிவை நான் வகுப்புக்குக் கொண்டு வந்தபோது, என் மாணவர்கள் அதைத் தாங்களும் சோதித்துப் பார்க்க வேண்டும் என்றார்கள். என் குறுந்தகட்டை நளினி என்ற மாணவியிடம் கொடுத்து, 'நீ இதிலிருந்து பிரதி எடுத்துக் கொண்டு, என்னுடையதைத் திருப்பிக் கொடுத்துவிடு. இது ஒன்றே ஒன்றுதான் என்னிடம் இருக்கிறது'' என்றேன்.

குறுந்தகட்டை கம்ப்யூட்டரில் செருகி விட்டாள் நளினி. நாங்கள் எல்லோரும் அவளைச் சூழ்ந்து கொண்டு நின்றிருந்தோம். என்னிடம் பேசிக் கொண்டே, தவறுதலாக, குறுந்தகட்டில் பதிவாகி இருந்த அத்தனைத் தகவல்களையும் அழித்து விட்டாள் நளினி. 'ஃபார்மெட்டிங்கின்போது நிகழ்ந்த தவறு! எல்லோரும் அதிர்ச்சியில் சிலைகளாகிவிட்டோம். என்னைக் கலவரத்தோடு பார்த்தார்கள். நளினிக்குக் கண்களில் நீரே வந்து விட்டது. நான் ஒரு வாரம் பூரா கஷ்டப்பட்டு, பிரச்னைக்கு ஒரு தீர்வைக் கண்டுபிடித்துப் பதிவு செய்திருந்த குறுந்தகடு அது!

கொஞ்ச நேரத்துக்கு நான் அதிர்ந்து போய்விட்டேன். ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு, சமாதானமாகி, புன்னகை செய்தேன். எந்தப் படபடப்பையும் புன்னகை போக்கி விடும். நட்புக்கு ஒரு மருந்து மாதிரிதான் புன்னகை. என் மாணவர்கள் எல்லோருமே என் இளம் நண்பர்கள்தானே? நான் புன்னகை செய்தவுடன், சூழ்நிலையின் இறுக்கம் தளர்ந்தது. நாற்காலியிலிருந்து எழுந்தேன்.

நளினியோ, அழுது கொண்டே, ''என்னை மன்னித்து விடுங்கள் மேடம். நான் வேண்டுமென்றே செய்யவில்லை'' என்றாள்.

''நீ வேண்டுமென்றே அப்படிச் செய்யவில்லை என்று எனக்குத் தெரியும், நளினி. என்னுடைய எந்த மாணவருமே அப்படிச் செய்ய மாட்டார்கள். விபத்து வருவதை யாரும் முன்கூட்டியே அறிய முடியாது. எல்லோருமே தவறு செய்வார்கள். தான் தவறே செய்ததில்லை என்று யாராவது சொன்னால், அவர் ரோபோவாகத்தான் இருக்க முடியும்; மனிதனாக இருக்க முடியாது. நம் தெய்வங்களும், முனிவர்களும் கூடத் தவறுகள் செய்திருக்கிறார்கள். போகட்டும், இப்போது மறுபடி புரோக்ராம் தயார் செய்வது எப்படி என்று யோசிப்போம்.''

''ஒரு வாரம் இதற்காகச் செலவிட்டு விட்டு, இப்போது எப்படி அமைதியாக இருக்கிறீர்கள், மேடம்?''

''இருக்கட்டும். மறுபடி நேரம் ஒதுக்கிக் கொண்டு, புரோக்ராமைத் திரும்ப எழுத முடியுமா பார்க்கிறேன். நான் இதே மாதிரி ஒரு தவறை

**சுதா மூர்த்தி**

# உள்ளங்கையில் உலகம் 6

இளமையில் செய்திருக்கிறேன். அதனால்தான் அமைதியாக இருக்கிறேன்."

மாணவர்கள் எல்லோரும் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். நான் நிகழ்ச்சியைச் சொல்ல ஆரம்பித்தேன்:

"சின்ன வயதில், யாராவது பெண்களைப் பற்றிச் சொன்னால், நான் ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்டு விடுவேன். 'இது பெண்களால் முடியாது' என்று யாராவது சொல்லிவிட்டால் உடனே, அதைப் பொய்யாக்குகிற வகையில், அந்த வேலையைச் செய்ய முற்படுவேன். பெண்களாலும் எல்லாம் செய்ய முடியும் என்று உலகத்துக்கு நிரூபிக்க வேண்டும் என்ற ஆர்வம். இன்று இதை நினைத்தால் சிரிப்பேன். ஆண்கள் சில வேலைகளை நன்றாகச் செய்ய முடியும்; அதே போலப் பெண்கள் சில வேலைகளை நன்றாகச் செய்ய முடியும். இருவரும் பரஸ்பரம் இணைந்து செயல்பட்டால் போதும். ஒருவரின் திறனை இன்னொருவருக்கு நிரூபிக்க வேண்டிய அவசியமில்லை.

"அப்போது நான் ஒரு கம்ப்யூட்டர் மென்பொருள் நிறுவனத்தில் சிஸ்டம் அனலிஸ்ட் ஆக வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போது போல கம்ப்யூட்டர் துறை முன்னேறியிராத ஆரம்பக் காலம். இன்றைக்கு மூன்றரை அங்குலத்தில் குறுந்தகடு கிடைக்கிறது. நான் சொல்லுகிற காலத்தில் பதினைந்து கிலோ எடையுள்ள டாண்டன் டிஸ்க் டிரைவ்தான் உபயோகத்தில் இருந்தது.

"ஒரு நாள் பேச்சுவாக்கில் என் உயர் அதிகாரி, இந்த டிஸ்க் ரொம்பக் கனம். ஆண்கள்தான் தூக்கிக் கொண்டு போக முடியும்" என்றார்.

இதைக் கேட்டதும் எனக்கு என்னவோ போல் ஆகி விட்டது. சும்மா இருக்காமல், "நான் தூக்கிக் கொண்டு போகிறேன்

## நிஜக் கதை!



பாருங்கள்!" என்றேன்.

"கிராமஃபோன் தட்டுப் போல, ஆனால் அதை விடப் பெரிதாகவும், கனமாகவும் இருந்தது அது. நிறுவனத்தின் நிதி விவகாரங்கள், ஊழியர்களின் குறிப்புகள் எல்லாம் அடங்கிய பெரிய தகடு அது. அதை எடுத்துக் கொண்டு உயரதிகாரியின் அறைக்குப் போனேன். பயங்கர கனம். ஆனால் முகத்தில் அதைக் காண்பித்துக் கொள்ளவில்லை. உணர்ச்சிகளை வெளியே காண்பிப்பது பலவீனமானது என்று எண்ணியவன் நான். (இப்போது நேர் எதிர். முகத்தில் பளிச்சென்று உணர்ச்சிகளைக் காட்டி விடலாம் என்பேன்.)

"அத்தனைப் பெரிய தகட்டை எடுத்துக் கொண்டு நான் அறைக்குள் நுழைந்தபோது, உயரதிகாரிக்கு வியப்பு. "எப்படி இதைத் தூக்கிக் கொண்டு வந்தாய்?" என்று கேட்டார்.

"துளிக்கூட யோசிக்காமல், என்னுடைய சாதனையில் நானே மகிழ்ந்து போய், அவர் வார்த்தைகளைப் பொய்ப்பித்து விட்ட வெற்றியில், கையை உயர்த்திவிட்டேன்.

"அடுத்த நொடி அந்தத் தகடு கீழே விழுந்து சுக்குநூறாக உடைந்து போயிற்று. அலுவலகம் முழுக்க அந்த டமார் சத்தம் கேட்டிருக்க வேண்டும். எல்லோரும் திரும்பி என்னைப் பார்த்தார்கள். நிறுவனத்தின் சரித்திரத்திலேயே அதுதான் மிகப் பெரிய குற்றமாக இருந்திருக்க வேண்டும்; மன்னிக்க முடியாத குற்றம். நிறுவனத்தின் மிக முக்கியத் தகவல்கள் அடங்கிய தகடு நொறுங்கிப் போய், எல்லாமே ஒரு நொடியில் அழிந்து போய் விட்டன!

"வாயடைத்துப் போய் அப்படியே நின்று விட்டேன். என் முட்டாள்தனமான செய்கையால், நிறுவனத்துக்கே பெரிய சங்கடம் உண்டாக்கி விட்டேன். ஓர் ஊழியர் நிறுவனத்தின் வளர்ச்சிக்கு உதவுகிற மாதிரி உழைக்க வேண்டும். ஆனால் நான் என்ன செய்திருக்கிறேன்! அழக் கூட முடியாமல் அப்படியே உறைந்து போய் விட்டேன். என்னுடைய மேசைக்குத் திரும்பி, கொஞ்ச நேரம் அசையாமல் உட்கார்ந்திருந்தேன். யோசித்த பிறகு, என்ன செய்ய வேண்டும் என்று புரிந்தது. ஒரு வெள்ளைத் தாளை எடுத்து, என் ராஜினாமாக் கடிதத்தை எழுதினேன். என் இமாலயத் தவறுக்கு அதுதான் சரியான தண்டனையாக இருக்க முடியும். மேலதிகாரியின் அறைக்குள் போய், தலையைக் குனிந்து கொண்டு அவமானத்துடன் நின்றபடி ராஜினாமாக் கடிதத்தை நீட்டினேன்.



"டிக்கெட் கிடைக்காதவர்களுக்கெல்லாம் ஆறுதல் சொல்லி முடிப்பதற்குள் தேர்தல் முடிவே வந்துட்டுது."

"இப்ப என்ன செய்யப் போறீங்க?"

"தோத்துப் போனவர்களுக்கு ஆறுதல் சொல்லப் போறேன்!"

- பம்மல் நாகராஜன்

"அவர் கடிதத்தைப் படித்தார். படித்ததும் கிழித்துப் போட்டார். 'எல்லோரும் தான் தவறு செய்கிறார்கள். நீ தகட்டை எடுத்துக் கொண்டு போகு முன், அந்தத் தகவல்களை எல்லாம் ஏற்கெனவே முன்னால் பதிவு செய்து விட்டேன். தகவல்கள் அப்படியே இருக்கின்றன. நீ கவலைப்பட வேண்டாம். தவறை நினைத்து வருத்தப்படுவதே தண்டனைக்குச் சமமானதுதான். இவ்வளவு தூரம் நீ உணர்ச்சி வசப்படக் கூடாது. உணர்ச்சி வசப்படுபவர்கள் வாழ்க்கையில் மிகவும் சிரமப்படுவார்கள். போய் உங்கள் வேலையைத் தொடருங்கள்' என்றார். என்னால் எதுவும் பேசவே முடியவில்லை.

இப்போது நளினியைப் பார்த்து, "தவறு என் மீதும் இருக்கிறது. இத்தனை முக்கியமான புரோக்ராமின் பிரதியை நான் எடுத்து வைத்திருக்க வேண்டும். ஆனால் கவலைப் படாதே. மறுபடி எழுதுகிறேன் புரோக்ராமை. அதற்கான அடிப்படைத் தகவல்கள் என்னிடம் இருக்கின்றன" என்றேன்.

என் மாணவர்கள் மகிழ்ச்சியுடன் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள்.

(தொடரும்)

# உங்கள் மூட்டுவலியை தொலைப்பது எப்படி?

அறுபது வயது பெரியவர் ஒருவர் 'ஆர்தோக்யூர்' என்று உரக்கச் சொல்லிக் கொண்டே உயரே குதிக்கும் ஒரு விளம்பரம்தான் இப்போது டி.வி.யில் பிரபலம். அது 'ஆர்தோக்யூர்' என்ற மூட்டு வலி மாத்திரைக்கான விளம்பரம்.

கடந்த சில ஆண்டுகளாக இந்த 'ஆர்தோக்யூர்' மாத்திரைகள் மற்றும் ஆயிலை மார்க்கெட்டிங் செய்துவரும் 'க்யூர்வெல் ஃபார்மா' நிறுவனத்தின் நிறுவனத் தலைவர் திரு. ஆர்.பி. சம்பத்குமார் அவர்களிடம் அவர்களது தயாரிப்புகள் குறித்து பேசினோம்.

*மூட்டுவலி ஏன் வருகிறது?*

பொதுவாக வயதான காரணத்தினால் மூட்டுகளில் ஏற்படும் தேய்மானத்தினாலும், மூட்டுகளில் இருக்கும் லூப்ரிகேன்ட் திரவம் வற்றிப் போவதாலும், மூட்டுகளிடையே யூரிக் ஆசிட் கிரிஸ்டல் உருவாகிறது. இதனால் மூட்டுகளுக்கு அதிக உராய்வு ஏற்பட்டு மூட்டுவலி வருகிறது.




*இதற்கு என்ன சிகிச்சை?*

சில மருத்துவ சிகிச்சைகள் இருந்தாலும், பொதுவாக மூட்டுவலியை குறைக்கும் மாத்திரைகள் மற்றும் ஆயில்களை உபயோகப்படுத்தி வலியில் இருந்து நிவாரணம் பெற முடியும்.

*உங்களுடைய 'ஆர்தோக்யூர்' மாத்திரை எப்படி செயல்படுகிறது?*

எங்கள் தயாரிப்பான 'ஆர்தோக்யூர்' மாத்திரைகள் 'செலரி விதை'யின் சாரத்தைக் கொண்டு தயாரிக்கப்படுகிறது. இதன் முக்கியக் குணமே மூட்டுகளுக்கு இடையே உருவாகும் யூரிக் ஆசிட் கிரிஸ்டல்களை கரைப்பதுதான். இந்த கிரிஸ்டல்கள் கரைந்து விடுவதால் மூட்டு வலி வெகுவாக குறைகிறது.

*தற்போதுள்ள மார்க்கெட்டில் உள்ள பல அலோபதி மருந்துகளைவிட ஆயுர்வேத ஆர்தோக்யூர் எப்படிச் சிறந்தது?*

ஆங்கில மருந்துகளை உபயோகிப்பதால் வாயுத் தொல்லை, வயிற்றில் எரிச்சல் போன்ற வேறு பல தொல்லைகள் வர வாய்ப்புண்டு. அதோடு சிறிது நாட்கள் கழித்து இந்த ஆங்கில மருந்துகளின் செயல்படும் திறனும் குறைந்துவிடும். மேற்கூறிய எந்த பாதிப்பும் இல்லாமல் வாழ்நாள் முழுவதும் மூட்டுவலித் தொல்லையிலிருந்து விடுபட, 'ஆர்தோக்யூர்' மாத்திரைகளே சிறந்தது.

*ஆர்தோக்யூர் மாத்திரைகள் எவ்வளவு சாப்பிட வேண்டும்?*

சாதாரணமாக முதல் மாதத்தில் தினமும் மூன்று வேளைக்கும் வேளைக்கு ஒன்று என்ற அடிப்படையில் மூன்று மாத்திரைகளும், இரண்டாம் மாதம் காலை மற்றும் இரவு என்று இரண்டு மாத்திரைகளும் சாப்பிட்டால் போதும். முதல் 15 நாட்களிலேயே வலியின் தீவிரம் குறையத் தொடங்கிவிடும். இரண்டு மாதங்களுக்குப் பிறகு 'மெயின்டனன்ஸ் டோஸ்' ஆக தினமும் ஒன்று சாப்பிட்டு வந்தாலே மூட்டுவலி குறைந்து போய்விடும்.

*இந்த மாத்திரைகளால் பக்க விளைவுகள் உண்டா?*

இந்த மாத்திரைகள் 100 சதவீதம் ஆயுர் வேதத் தயாரிப்பு என்பதால் பக்க விளைவுகள் ஏற்பட வாய்ப்பில்லை. ஆயுர்வேதம் என்பதால் நிவாரணம் கிடைக்க நீண்ட காலம் ஆகும் என்று நினைக்க வேண்டாம். ஏனெனில் நாங்கள் இதன் மூலப் பொருட்களை அப்படியே பயன்படுத்தாமல், மூலப் பொருட்களில் இருந்து 'எக்ஸ்ட்ராக்ட்' எடுத்துத்தான் பயன்படுத்துகிறோம். அதாவது 10 கிலோ மூலப் பொருட்களில் இருந்து ஒரு கிலோ எக்ஸ்ட்ராக்ட் மட்டுமே கிடைக்கும். இதனால் இந்த மாத்திரையின் செயல்திறன் மிகவும் அதிகம். அதனால்தான் எங்கள் விளம்பரங்களில் கூட 'ஆயுர்வேதம், திறனோ அதிவேகம்' என்ற வாசகத்தைப் பயன்படுத்துகிறோம்.

இதில் உட்கொள்ளும் மாத்திரைகள் மட்டும் இல்லாமல் மூட்டுகளில் தடவும் 'ஆர்தோக்யூர்' ஆயிலும் உள்ளது. எங்கள் நிறுவனத் தயாரிப்புகள் தமிழ்நாட்டில் உள்ள எல்லாப் பிரபல மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது. பல பிரபல மருத்துவர்களும் தங்கள் நோயாளிகளுக்கு மூட்டுவலிக்கான மருந்தாக, எங்களது 'ஆர்தோக்யூர்' மாத்திரைகளை சிபாரிசு செய்கிறார்கள்.

மேலும் இப்போது 'ஆர்தோக்யூர்' மாத்திரைகள் தென் இந்தியா முழுவதும் கிடைக்கும்.

**காலம் காலமாக மூட்டு வலியால் அவதிப்பட்டு வந்தவர்கள் முகத்தில் இனி நிம்மதியைப் பார்க்கலாம்.**




மேலும் விவரங்களுக்கு :

**கியூர்வெல் ஃபார்மா,**

சென்னை - 83. போன் : 24893013, 24711719

கிடைக்குமிடம் :

கர்நாடகா : 080-22874575, 22873961
ஆந்திரா : 040-24755925, 24750585
கேரளா : 0491-2501772, 0466-2208101
மும்பை : 022-27894441/2, 27898072
புதுடெல்லி : 9891307489, 9810000416

ADVT.





கபிலன்

கழுத்துவரை வெள்ளம்
கால் உடைந்து
ஓலைப் பிரமிடுகளாய்
அமுந்திக் கிடந்தன
குடிசைகள்.

கரண்ட்டு கம்பத்தில் நின்று
மூழ்கிய சேரியைப் பார்க்கும்
காக்கைகள்.

வேலைவிட்டு வருபவர்
தண்ணீருக்குள்
தள்ளிக் கொண்டு வந்தார்
சைக்கிள்.

தண்டவாள மேடுகளில்
வயிறு உப்பி
செத்துக்கிடந்தன மாடுகள்.

யார் வீட்டு திண்ணையிலோ
தலை தூக்கி நின்றிருந்தது
நாய்.

கட்டில் மீது நாற்காலி இட்டு
உட்காரவைத்தனர்
பிணத்தை.

திருமணமாகும் பெண்
மாநகராட்சிப் பள்ளி மாடி
ஜன்னலுக்குள்
சிறையிருந்தாள்.

இன்னும் எத்தனையோ
அவலங்கள்
அடிநீரிலும்
மேல் நீரிலும்

கண்ணாடித் தொட்டிக்குள் இருந்த
கலர் மீன்களை
எங்கே போய்த் தேடுவேன்!

உடனே கேட்கும்
குழந்தைக்கு!

# கலர் மீன்கள்

ஒரு ஷூட்டிங்கிலிருந்து, ஜூட்விட்டு விட்டு, நழுவ வேண்டிய அவசியம் ஏற்பட்டால், நான் கடைப்பிடித்த டெக்னிக் இதுதான். எலெக்ட்ரிகல் பவர் சப்ளை சம்பந்தப்பட்ட விஷயங்களை கவனித்துக் கொள்ளுகிற மேஸ்திரியின் பாக்கெட்டில் ரகசியமாக ரூபாய் நோட்டுகளை வைத்து விட்டால், அவர் புரிந்து கொண்டு விடுவார்.

அடுத்த விநாடியே கரண்ட் கட்தான். எல்லாரும் அலுத்துக் கொள்ளுகிற நேரத்தில், நைஸாக நான் செட்டிலிருந்து

சர்வராக இருந்த நான் பிற்காலத்தில் பெரிய நிலைக்கு வந்தபின், ஹீரோயின் கே.ஆர்.விஜயாவை, சந்திக்கிற காட்சிதான் அது.

நான் சர்வராக இருக்கிற சமயம், ஒரு தடவை கே.ஆர். விஜயா என்னைப் பார்த்து, 'to be frank with you, I like your innocence' என்று ஒரு வசனம் பேசுவார். நான் படிக்காத சர்வர் தானே? இன்னொ



• கே. பாலசந்தர்

சுக்க முடியாத இந்த சுந்தரம், இன்னிக்கு அதுமாதிரி எத்தனை வார்த்தை... இல்லை... ஒரு வார்த்தைக்கு எத்தனை வார்த்தை everlasting, undying, unfailing, unlimited, unbounded, permanent, supreme..., நான் ஒண்ணும் பெருமைக்காக சொல்லலை... ஒண்ணுமே இல்லாத சுந்தரம், இன்னிக்கு இந்த அளவுக்கு உயர்ந்திருக்கேன்னு சொன்னா, என் டியர் ஃபிரெண்டு ராகவன்... அவன் தான் காரணம்'னு படபடவென்று வசனம் பேசுவேன்.

# முத்துக் குளிக்க வாரீகளா?

நழுவி, காரில் ஏறி, என்னை எதிர்பார்த்துக் காத்திருக்கும் ஷூட்டிங் ஸ்பாட்டுக்குப் போய் விடுவேன். மடமடவென்று என் சம்பந்தப்பட்ட காட்சிகளை நடித்துக் கொடுத்துவிட்டு, போன சுவடு தெரியாமல் திரும்பி வந்துவிடுவேன்.

சர்வர் சுந்தரம் படத்தில் இடம் பெற்ற ஒரு காட்சியை என்னால் மறக்கவே முடியாது.

**நாகேஷ்**



சென்ஸ் என்ற வார்த்தைக்கு அர்த்தம் தெரியாமல் முழிப்பேன்.

மறுபடியும் பெரிய ஆளாக அவளை சந்திக்கிறபோது, இந்தப் பழைய சம்பவத்தை நினைவு கூறும் வகையில் வசனம் பேசுவேன். "ராதா! நான் சர்வராக இருந்த போது, நீ ஐ லைக் யுவர் இன்னொசென்ஸ்'னு சொன்ன போது, அதைப் புரிஞ்



• கண்ணதாசன்

இந்தக் காட்சியை நடித்து முடித்தவுடன், டைரக்டர் கே.பாலசந்தர் என்னை அப்

படியே கட்டிப்பிடித்துக் கொண்டு, "டேய்! ராவ்ஜி! பிரமாதம்டா! எப்படிடா இவ்வளவு அற்புதமா நடிக்கிறே!" என்று பாராட்டினது எனக்கு ஆயுசுக்கும் மறக்காது.

ஆனால், அந்தக் காட்சியில் 'ஒரு வார்த்தைக்கு எத்தனை வார்த்தை... எவர் லாஸ்டிங், அன்டையிங்... என்று ஆரம்பித்து,



பர்மனென்ட், சுப்ரீம்... என்று முடித்தது இருக்கிறதே, அது என் சரக்கு கிடையாது.

1948ம் வருஷம், தாராபுரம் போர்டு ஹைஸ்கூலில் ஹெட்மாஸ்டராக இருந்தவர் ராஜகோபாலன். அவர் இங்கிலீஷ் பாடம் நடத்தினால், அவ்வளவு அற்புதமாக இருக்கும். அந்த வார்த்தைக்கு நான் சொன்னேனே, அத்தனை வார்த்தைகளையும் அடுக்கிக் கொண்டே போவார்.

அதைத்தான், நான் சர்வர் சுந்தரம் படத்தில் நினைவு கூர்ந்து, பேசினேன். அது தான் டைரக்டர் பாலசந்தரின் பாராட்டை ஸ்பான்டேனியசாக எனக்குப் பெற்றுக் கொடுத்தது.

ஒரு நாள் பாலு, கண்ணதாசன், எம்.எஸ்.விஸ்வநாதன் மூன்று பேரும் ஒன்றாக இருந்தபோது, நான் அங்கே

"நம்ம கட்சி தோற்றதுக்கு உங்க பிரசாரம்தான் காரணம் தலைவரே!"
"என்னய்யா உளர்றே?"
"பின்னே! மக்கள் சிந்திச்சு வோட்டுப் போடணும்னு நீங்க மேடைக்கு மேடை பேசினீங்களே!"

- மு. அகமது ஆதில்

போனேன். "வா நாகேஷ்! உனக்குத்தான் ஒரு டூயட் பாட்டெழுதிக் கொண்டிருக்கிறேன்!" என்றார் கவிஞர். "தூத்துக்குடி பாஷை பேசுவியே, அதற்கு ஏற்றாற்போல் ஒரு பாட்டு கேட்டிருக்கிறேன்" என்றார் பாலு.

அவ்வளவுதான்! கண்ணதாசன், "தூத்துக்குடியா?" என்று கேட்டு விட்டு, பக்கத்தில் இருந்த பஞ்சு அருணாசலத்திடம், "பஞ்சு! பாட்டை எழுதிக்கோ" என்று சொல்லி விட்டு, ஆரம்பித்தார்.

"முத்துக் குளிக்க வாரீகளா?
மூச்சை அடக்க வாரீகளா!"

'அட! தூத்துக்குடி என்று மனுஷரிடம் சொன்ன மாத்திரத்தில், 'அதற்கு ஏற்றபடி பாடல் வரிகள் வந்து விழுகின்றனவே!' என்று நாங்கள் அனைவருமே ஆச்சரியப்பட்டுப் போனோம்!

அத்துடன் விட்டுவிடவில்லை. எம்.எஸ்.வியிடம், "நம்ம நாகேஷுக்காக பாட்டுல ஸ்பெஷலா ஏதாவது செய்!" என்று சொல்லவும், எம்.எஸ்.வி. தான் போட்டிருந்த டியூனை தாலாட்டு பாணியில் சற்றே நீட்டி, போட்டுக்காட்ட, அடுத்த கணம், 'ஆனான பொண்ணுக பாக்கு வெக்கும் முன்னமே...' என்று தாலாட்டு வரிகளைச் சேர்த்து, இன்னும் சந்தோஷத்தில் ஆழ்த்திவிட்டார்.

கண்ணதாசனைப் போல ஒரு கவிஞர் இனி பார்க்க முடியுமா தெரியவில்லை. சிச்சுவேஷனைச் சொல்லிவிட்டால், பொருத்தமான பாடல் வரிகள் தானாக வந்து விழும். அவர் எம்.எஸ்.விஸ்வநாதன் போட்ட டியூன்களுக்கும் பாட்டு எழுதி இருக்கிறார். எம்.எஸ்.விஸ்வநாதன், கவிஞரின் பாடல்களுக்கும் இசை அமைத்திருக்கிறார். எப்படி இருந்தாலும் கேட்பவர்களை மெய்மறக்கச் செய்து விடும் தன்மை அந்தப் பாடல்களுக்கு உண்டு.

இந்த விஷயத்தை நான் சொல்லித்தான்

உங்களுக்கெல்லாம் தெரிய வேண்டும் என்பது கிடையாது. ஆனாலும், கண்ண தாசன் பற்றி நினைக்கிறபோது, தோன்றும் இனிய நினைவுகளை என்னால் சொல் லாமல் இருக்க முடியவில்லை.

டைரக்டர் ஸ்ரீதர் - கண்ணதாசன் காம்பினேஷனும் பல அற்புதமான பாடல்களை தமிழ்த் திரை உலகுக்குக் கொடுத்திருக்கின்றன. இதற்கு ஏகப்பட்ட உதாரணங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம்.

போலீஸ்காரன் மகள் படத்தில் ஒரு காட்சிக்கு அவர் எழுதிய பாடல்:

*'கண்ணிலே நீர் எதற்கு?*
*காலமெல்லாம் அழுவதற்கு'*

என்று ஆரம்பிக்கும். அற்புதமான, காட்சிக்கு ஏற்ப எழுதப்பட்ட பாட்டு. அது முடியும் போது வரும் வரிகள், கிளாஸிக் டச்சுடன்

*'பூவிலே தேன் எதற்கு?*
*வண்டு வந்து சுவைப்பதற்கு*
*வண்டுக்கு சிறகு(கு)எதற்கு?*
*உண்ட பின்பு பறப்பதற்கு'*

என்று அமைந்திருக்கும்.

இந்தப் பாட்டை எழுதினபோது, கண்ணதாசன் தன் குரலிலேயே பாடிக் காட்டியதைக் கேட்டு மெய்மறந்து ரசித்திருக்கிறேன் நான்.

மூடு இல்லையெனில், கவிஞரிடம் பாட்டு எழுதி வாங்குவது என்பது முடியாத காரியம்தான்.

கேட்ட நேரத்தில் பாட்டு கிடைக் காமல் தயாரிப்பாளர்களும், டைரக்டர் களும் வந்து நின்று கொண்டு இருப்பார் கள். "அண்ணே! பாட்டு!" என்று கேட் டால், இவர் உடனே, "பாட்டு எழுதற துங்கறது என்ன செக்குல கையெழுத்துப் போடறாப் போலவா? எப்போ, எங்கே நீட்டினாலும் நீங்க கையெழுத்துப் போடுவீங்க. ஆனா, என்னால அது மாதிரி பாட்டு எழுதித் தர முடியாது. பாட்டுன்னா அது தானாத்தான் வரணும்' என்று சொல்லி, காத்திருப்பவர்களுக்கு ஏக டென்ஷன் கொடுத்து விடுவார்.



சில சமயம் குஷி மூடில் இருந்தால், கவிஞரது செயல்பாடு விசித்திரமாக இருக்கும். சட்டென்று பக்கத்தில் ஹார் மோனியப் பெட்டி சகிதம் உட்கார்ந்து கொண்டு இருக்கிற எம்.எஸ்.வியின் இடுப்பு பகுதியில் கைவைத்து கிச்சுகிச்சு மூட்டுவார்.

ரொம்ப சென்சிடிவ் ஆன எம்.எஸ்.வியால், கவிஞரது இந்த திடீர்த் தாக்குதலை சகித்துக் கொள்ள முடியாது. சட்டென்று உணர்ச்சிவசப் பட்டவராக அசிங்கமான வார்த்தைகளைச் சொல்லி திட்டிவிடுவார்.

பார்க்கிறவர்கள், 'எம்.எஸ்.வி இவ் வளவு அசிங்கமாகத் திட்டிவிட்டாரே! அவ்வளவுதான்! கவிஞர் பதிலுக்குத் திட்டப் போகிறார். இன்னும் சில நிமிடங்களில் திரையில் இடம் பெறும் ஒரு சண்டைக்காட்சி இங்கே ஆரம்பிக் கப் போகிறது' என்று நினைப்பார்கள்.

சற்றே பதற்றமான சூழ்நிலை ஏற்படும்.

(சிரிப்பு தொடரும்)

# நியூயார்க் நல்ல நியூயார்க்!

அந்த ஜன சமுத்திரம் அலாதியானது. அமெரிக்கப் பெரு நகரங்களில் தனித்துவம் கொண்டது.

ஆங்கிலத்தில் - 'you must see it to believe it' என்பார்கள். கண்ணால் காண்பதே மெய் என்னும் வகை அது. நியூயார்க்கை வெறும் வர்ணனைகளைப் படித்துப் புரிந்து கொள்ள முடியாது. கற்பித்துக் கொள்ளவும் முடியாது. அடுக்கி வைக்கப்பட்டது போல வானைத் தொடும் அடுக்கு மாடிக் கட்டடங்கள். ஒரு கட்டடமும் முழுசாக காமரா லென்ஸுக்குள் வர முடியாத உயரம். டாக்ஸியிலிருந்தும் பஸ்ஸிலிருந்தும் (டூரிஸ்ட் பஸ்களில் திறந்த மேல் தளத்தில் அமர்ந்தாலொழிய) எந்தக் கட்டடத்தையும் பார்க்க யாத்திரிகர்களுக்குத் துணிவு வராது. கழுத்து நிச்சயம் சுளுக்கிக் கொள்ளும். கட்டடங்களின் உயரத்தை அளக்கும் ஆசையில், நானும் என் கணவரும் மேல் தளத்தில் அமர்ந்து பல் கிடுகிடுத்த குளிரைத் தாங்கிக் கொண்டோம். அம்மாடி - எத்தகைய அனுபவம் அது! நான் நியூயார்க்கிற்கு மூன்றாவது முறையாக வருகிறேன். இருந்தும் முதன் முறையாகப் பார்த்த போது பிரமிப்பில் வாயைப் பிளந்தது போலவே இப்போதும் பிரமிக்கிறேன். அங்கு தெருக்களில் பிரவகிக்கும் ஜன சக்தியைப் பார்க்கையில், என்னுள் சக்தி பிறக்கிறது. தொற்றிக் கொள்ளும் சக்தி அது. பீனிக்ஸில் நான் தெருவில் பார்க்கும் மக்கள் 'கனவான்கள்'. ஓர் ஆளை அழித்தால் ஐந்து ஆள் செய்யலாம். அவர்களுக்கு நடந்தே பழக்கமில்லை. நியூயார்க் மக்கள் நேர் விரோதம். ஆணும் பெண்ணும் 'சிக்' என்று இருக்கிறார்கள். ஊளைச் சதை போட வாய்ப்பே இல்லை. நடக்கிறார்கள் அப்படி. நிற்காமல் நடந்தபடியே இருக்கிறது ஜனத்திரள். நியூயார்க்கை ரசிக்க வேண்டுமானால், நடை முக்கியம். நடப்பதே அங்கு சுகம்.

### இப்படியும் அருங்காட்சியகங்களா?

வானை முட்டும் கட்டடங்கள் எல்லாம் இருபதாம் நூற்றாண்டு ஆரம்பத்திலேயே கட்டப்பட்டவை என்பது, நம்ப முடியாத அற்புதங்களில் ஒன்றாக எனக்குப் படுகிறது. இந்தத் தொழில் நுட்பத்திற்கு ஈடு கொடுத்தபடி, எப்படி இப்படிப்பட்ட ஒரு கலவையான இன மக்கள் வளர்ந்தார்கள் என்று புரியவில்லை. ஆரம்பத்தில் வந்த ஐரிஷ்காரர்கள், யூதர்கள், இத்தாலியர்கள், ஸ்பானியர்கள் எல்லாரையும் விழுங்கி விடும் அளவுக்கு, இப்போது ஜப்பானியர், கொரியர்,



**வாஸந்தி**

அமெரிக்க டயரிக் குறிப்பு 10

இந்தியர், பாகிஸ்தானியர், சீனர் என்று எல்லா இடங்களிலும் பரவி விட்டார்கள்.

சின்ன வேலை பார்க்கும் உயர் படிப்புப் படிக்காத ஆசியர்கள் நியூயார்க்கில் அதிகம். சென்டிரல் பார்க் என்ற நூற்றியைம்பது வயதான பிரம்மாண்டமான (843 ஏக்கர் நிலம்) பூங்காவைப் பார்க்கச் சென்ற போது, நுழை வாயிலில் ஒரு இந்தியர் கை வண்டியைத் தள்ளியபடி ஸாப்ட் டிரிங்க்ஸ் விற்றுக் கொண்டிருந்தார். எங்களைப் பார்த்து இனம் கண்டு மகிழ்ச்சியுடன் இந்தியில் பேச ஆரம்பித்தார், 'பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன் ஜலந்தரில் இருந்து வந்தேன்' என்றார். 'கை நிறையச் சம்பாதிக்கிறேன். வாழ்க்கை நிம்மதியாக இருக்கிறது' என்றார். வண்டியில் ஒரு கிருஷ்ணர் படம் மாட்டியிருந்தது. திறந்த டிபன் டப்பாவில் வீட்டிலிருந்து கொண்டு வந்த ரொட்டியும் சப்ஜியும் இருந்தன. தில்லி இந்தியா கேட்டிற்கும், நியூயார்க் சென்டிரல் பார்க்குக்கும் இவருக்கு வித்தியாசமில்லை என்று தோன்றிற்று. ஆனால் அமெரிக்கத் தொழில் நுட்பம் மற்றும் கலைகளின் வளர்ச்சிக்கு எடுத்துக்காட்டாக இருக்கும் அருங்காட்சியங்களே, நம்மை நமது பிரமையிலிருந்து மீட்பவை. பூங்காவை ஒட்டிய பிரதான சாலையான ஐந்தாவது அவென்யூவில் இருக்கும் தி மெட்ரோபாலிடன் மியூசியமும், குகென்ஹைம் மியூசியமும் இரு வெவ்வேறு பாணிகளின் சிறப்பைச் சொல்பவை. ஜலந்தர்காரரின் வாழ்வுடன் சம்பந்தமில்லாதவை. மெட்ரோபாலிடன் மியூசியம் ஒரு நாள் பொழுதில் பார்க்க முடியாத பிரும்மாண்டம். ஈஜிப்டின் பிரமிட் கலாசாரத்திலிருந்து ஆரம்பித்து, கிரேக்க, ஐரோப்பிய கலாசாரம். மறுமலர்ச்சிக் கலைஞர்கள், சிற்பிகள், ஓவியர்கள் என்று பின்னிப்பின்னிச் செல்லும் அறைகள். கால் நோகாமல் இருக்க, நல்ல வேளையாக ஒவ்வொரு அறையிலும் பெஞ்சுகள் இருந்ததால் என் கால் பிழைத்தது. கூட்டமான கூட்டம் ஒவ்வொரு பகுதியிலும். பள்ளிச் சிறுவர் சிறுமியர் கும்பல், ஆசிரியைகளுடன் தரையில் குழந்தைகள் கையில் நோட்டுக்குடன் அமர, ஆசிரியை கேட்கும் கேள்விகளுக்கு சிரத்தையாக



விடை எழுதுகிறார்கள். ஆர்வத்துடன் ஒலியங்களைப் பற்றிக் கேள்வி கேட்கிறார்கள். அத்தனைக் கூட்டத்திற்கும் தரையில் ஒரு குப்பைக் கூளம் இருக்க வேண்டுமே! சத்தமோ காட்டிரைச்சலோ இல்லை. சட்டத்தைக் கடைப்பிடிக்கும் ஒழுங்கு, இங்கு இளம் வயதிலேயே வாழ்க்கை முறையாகி விடுவதாகத் தோன்றுகிறது.

## மாற்றமும் புதிய தடுமாற்றமும்

'பத்து ஆண்டுகளில் அமெரிக்க சமூகப் பார்வையில் நிறைய மாற்றம் வந்திருப்பதை தான் உணர்வதாக' நான் நியூயார்க்கில் சந்தித்த என் உறவுக்காரப் பெண் மாதங்கி தெரிவித்தாள். மாதங்கி சென்னையில் பொறியியல் பட்டம் பெற்றவள். பத்து ஆண்டுகளுக்கு முன் அவள் சென்னையில் வேலை பார்த்த நிறுவனம், அமெரிக்காவுக்கு வேலை நிமித்தமாக அனுப்ப, நியூயார்க் வந்து சேர்ந்தாள். ஆரம்ப நாட்களில் வெள்ளை அமெரிக்கர்கள் தங்கள் நிற பேத உணர்வை அவளிடம் காட்டியதாகச் சொன்னாள். வேலையில் அவளது திறமையை உணர்ந்த பிறகு, காலப்போக்கில் அவர்களிடையே மாற்றம் நிகழ்வதை உணர்ந்தாள். இப்போது அவள் உயர் பதவி வகிக்கிறாள். அவளை விட வயதான வெள்ளை அமெரிக்கர்கள் அவளுக்குக் கீழ் பணி புரிந்தாலும், ஏதும் சிக்கலில்லை என்கிறாள். கடந்த பத்து ஆண்டுகளில் நிறைய ஆசியர்கள் வந்து விட்டதால், சமூகம் அதிக பன்முகக் கலாசாரம் கொண்டதாக மாறிவிட்டதால், ஆசியர்களிடம் முன்பு காட்டப்பட்ட இலைமறை நிறபேத வெளிப்பாடு இப்போது இல்லை. எல்லோரும் அமெரிக்கப் பிரஜைகளாகப் பார்க்கப்படுகிறார்கள். (ஆனால் இப்பவும் கறுப்பர்கள் வெள்ளையருடன் ஒட்டாமல் இருப்பதை, எல்லாப் பொது இடங்களிலும் நான் கவனித்தேன்) "நானே ஒரு அமெரிக்கனாகத்தான் உணர்கிறேன்" என்றாள் மாதங்கி. இந்த நாட்டின் திறந்த மனப் போக்கு எனக்குப் பிடிக்கிறது. நமக்கு நம் இஷ்டப்படி வாழும் சுதந்திரமும் இங்கு போல் வேறு எங்கும், நமது நாட்டிலும் கிடைக்காது. கைக்குழந்தையை வைத்துக் கொண்டு வேலைக்குப் போவது சிரமமான காரியம் தான். ஆனால் நான் மட்டும் அந்தப் பிரச்னையை சந்திக்கவில்லை. எல்லாப் பெண்களும் சந்திக்கிறார்கள். நம் பிரச்னைகளை நாமே தான் சந்திக்க வேண்டும், என்ற தத்துவத்தை இங்கு கற்றுக் கொள்கிறோம். அதனால் சமாளிக்கிறோம். இது அதிக தன்னம்பிக்கையைக் கொடுக்கிறது. உணர்வு ரீதியாகவும் நான் ஒரு அமெரிக்கன் என்பதை, உலக வர்த்தக மையம் தகர்க்கப்பட்ட போது உணர்ந்தேன்" என்றாள் மாதங்கி.



''முடியாது'ங்கிற வார்த்தையே என் அகராதியிலே கிடையாது'ன்னு தான் சொல்லுவாங்க; ஆனா அந்த ஆளு 'முடியும்'கிற வார்த்தையே என் அகராதியில கிடையாதுன்னு சொல்லிட்டுப் போறாரே..''

''அப்படிதான் சொல்வாரு; 'மெகா சீரியல்' டைரக்டர் ஆச்சே!''

- தஞ்சை ஆதி

இரட்டைக் கோபுரம் தகர்க்கப்பட்ட இடத்தைப் பார்க்கச் சென்றோம். கிரவுண்ட் ஜீரோ என்று இப்போது அழைக்கப்படுகிறது. முன்பு அந்த செருக்கு மிகுந்த வானளாவிய கட்டடத்தைப் பார்த்திருக்கிறேன்.

இப்போது தரை மட்டமாகிவிட்ட இடத்தைப் பார்க்கும்போது, மனசு அதிர்ந்தது. பயங்கரவாதிகளின் மூர்க்கத் தாக்குதலுக்கு பலியானவர்களின் பெயர்ப் பட்டியலை பலகையில் வரிசையாகப் பார்த்த போது, நெஞ்சு குலுங்கிற்று. இங்கேயே வாழ்பவர்களுக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய தாக்கம், எப்படி இருந்திருக்கும் என்று கற்பனை செய்யத் திராணியற்றுப் போனது.

(தொடரும்)

# ஓவியன்

## ஏ.ஏ.ஹெச்.கே.கோரி

**ம**சூதிக்குப் போகிற வழியில் பிளாட்பாரம் ஓரத்தில் அந்த அற்புதமான ஓவியத்தைப் பார்த்தேன். சரஸ்வதி! வெள்ளைத் தாமரைப் பூவில் வீணை மீட்டிக் கொண்டிருக்கிற சரஸ்வதி. கூட்டத்தோடு கூட்டமாய் நின்று அந்த ஓவியத்தை ரசித்தேன்.

இந்த அற்புதமான ஓவியத்தை வரைந்த கலைஞன், பிளாட்பாரத்தில் பின்புறச் சுவரில் சாய்ந்து உட்கார்ந்திருந்தான். தரைமட்டத்திலிருந்து கொஞ்சமே கொஞ்சம் உயர்ந்திருந்த நாலு சக்கரத் தள்ளுவண்டி. துணைக்கு ஒரு நாய். பார்வையாளர்கள் சில்லறையைப் போட்டுவிட்டுப் போவதற்கான வசூல் குவளையொன்று. இளம்பிள்ளை வாதத்தால் சூம்பிப் போன கால்களோடு தள்ளு வண்டியில் உட்கார்ந்திருந்த அவனுடைய கால்களில் உயிரில்லை. ஆனால் கைகளில் என்னவொரு கலை!

அவனுடைய குவளையில் ஐந்து ரூபாய் நாணயத்தைப் போட்டு விட்டு மசூதிக்கு நடந்தேன்.

அடுத்த நாள் சாயங்காலம் லக்ஷ்மியின் ஓவியம் :

'வரலக்ஷ்மி வருவாயம்மா,
திருமாலின் தேவி
கடைக்கண் பாரம்மா'

என்று காலையில் ரேடியோவில் கேட்ட பாடலை என் வாய் முணுமுணுத்தது.

"என்ன பாய் சாமி, இந்துப் பாட்டைப் பாடறீங்க' என்ற குரலுக்குப் பார்வையைத் திருப்பினேன். ஓவியன். போலியோ ஓவியன்!

என்னுடைய லுங்கியையும், தாடியையும், தொப்பியையும் பார்த்து என்னை இனங்கண்டு கொண்டு, 'பாய் சாமி' என்று பெயர் வைத்துவிட்டது ரசிக்கும்படியாகத்தான் இருந்தது, அவனுடைய ஓவியத்தைப் போலவே.

பேச்சுக் கொடுத்தேன். "ஏம்ப்பா, தொப்பியும் தாடியும் வச்சிருந்தா, இந்துக் கடவுள் படத்துல இருக்கிற கலைய ரசிக்கக் கூடாதா?"

"ஐயையோ, தாராளமா ரசிக்கலாம் சாமி. ஒங்களப் போல போலித்தனம் இல்லாத ஆளுக்களத்தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும் சாமி"

"டெய்லி இங்க தான் படம் வரைவியா?"

"இங்கயிருந்து, ஜனங்க வெரட்டி விடற வரைக்கும், இங்கதான் கெடப்பேன் சாமி"

"ஒன்ன யாருப்பா வெரட்டிவிடப் போறாங்க. பார், ஒனக்கு எத்தனை ரசிகர்கள் இருக்காங்கன்னு."



"வெரட்டறதுன்னா அடிச்சி வெரட்டறதுதானா சாமி? ஜனங்களுக்கு அலுப்புத் தட்டிப் போயி, வசூல் கொறஞ்சி போச்சின்னா, என்ன வெரட்டி விட்ட மாதிரிதான்."

"கையில இருக்கிற மாதிரி, நாக்குலயும் ஒனக்கு விஷயம் இருக்கு"

"ஐயையோ, நாக்குல விஷமா?"

" விஷமில்லப்பா, விஷயம். நல்லாவே பேசற, நீ படம் வரையற அழக நா



பாக்கணுமே."

"நாளைக்கி மூணு மணி போல வாங்க, பாக்கலாம்."

அடுத்த நாள் ரெண்டே முக்கா லுக்கே ஸ்பாட்டுக்கு வந்து விட்டேன்.

எனக்காகவே காத்திருந்த மாதிரி, என் முகத்தைப் பார்த்ததும் சந்தோஷமாய் அவன் படம் வரைய ஆரம்பித்தான். வர்ணங்கள் அவனுடைய விரல் நுனியில் உயிர் பெறும் அற்புதத்தைப் பார்த்துப் பிரமித்து நின்றேன்.

ஒரு மணி நேர உழைப்பில் உயிர் பெற்றது, முருகக் கடவுளின் அழகான ஓவியம். அதன்பிறகு தினமும் மூணு மணிக்கு முன்பாகவே போவியோ ஓவி யனுக்கு முன்னால் ஆஜராகிவிடுவதும், அவன் வரைந்து முடிக்கும் வரைக்கும் பார்த்துக் கொண்டேயிருப்பதும், பிறகு அவனோடு கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருப்பதும் வாடிக்கையாகி விட்டது.

ஒரு நாள், "பாய் சாமி, நீங்க எனக்கு ஒரு உதவி பண்ணணுமே."

"செய்றேம்பா, சொல்லு."

"சாமி, நான் இந்துக் கடவுள் பட மெல்லாம் வரைஞ்சிட்டேன். கிறிஸ்தவக் கடவுள் படமும் வரைஞ்சிட்டேன். ஒங்க அல்லா படம் மட்டும் மாதிரிக்கிக் கிடைக்கவேயில்ல. எனக்கு அல்லா படம் ஒண்ணு கொண்டு வந்து தர்றீங்களா சாமி."

"அல்லா படம் கிடைக்காதுப்பா. அல்லாவுக்கு உருவம் கெடையாது. ஒண்ணு செய்றேன், எங்க மெக்கா மதினா மசூதிப் படம் வேணா கொணாந்து தாரேன். அதப் பாத்து நீ வரை."

மக்கா மதினா படத்தைக் காலையில் கொண்டு தருவதாய் வாக்களித்து விட்டு அங்கிருந்து அகன்றேன். ராத்திரி இஷாத் தொழுகை தொழுதுவிட்டு, வீட்டுக்குப் போனால், திருச்சியிலிருந்து எஸ்.டி.டி.

தில்லை நகரில் ஒரு கம்பெனிக்கு சரக்குக் கொடுத்த வகைக்கு ரொம்ப நாள் பேமெண்ட் பாக்கி. காலையில் ஒன்பது மணிக்கு வந்தால், பார்ட்டியை மடக்கிச் செக்கைக் கறந்து விடலாம் என்று தகவல் வந்தது.

ஆட்டோவில் எழும்பூருக்குப் போகிற வழியில், அவனுடைய இடத்தில் நிறுத்தி இறங்கினேன். ஓரமாய் அவன் முடங்கிப் படுத்திருந்தான். பக்கத்தில் படுத்திருந்த அவனுடைய நாய் என்னைப் பார்த்ததும் எழுந்து வாலை ஆட்டியது. பிறகு தன் எஜமானுடைய முகத்தை நக்கி, அவனை எழுப்பியது.

"பாய் சாமி, என்ன இன்னேரத்துல?" என்று எழுந்தான். நான் என்னுடைய விஷயத்தைச் சொல்ல, அவன் அவ னுடைய விஷயத்தைச் சொன்னான் :

"சாயங்காலம் இருட்டற நேரத்துல, கரை வேஷ்டிக் கோஷ்டியொண்ணு வந்துச்சு சாமி. நாங்க சொல்ற எடத்துல வந்து எங்க தலைவரோட படத்த வரைஞ் சிக்குடுத்துட்டுப் போடா, ஐந்நூறு ரூபா தர்றோம்னாங்க. அந்த கோஷ்டி போன கொஞ்ச நேரத்துல இன்னொரு கோஷ்டி வந்துச்சு. எங்க தலைவியோட படத்த வரைஞ்சு குடுத்துட்டுப் போடா, ஆயிரம் ரூபா தர்றோம்னாங்க. சாமி படம் வரை யற கையினால, சாத்தான்கள வரைய மாட்டேன் போங்கடான்னு திட்டி அனுப்பிச்சிட்டேன். ஒரு கோஷ்டி போயி ருச்சு. இன்னொரு கோஷ்டி நாளக்கித் திரும்பவும் வர்றோம், யோசிச்சு வைய் யின்னு மிரட்டிட்டுப் போயிருக்கு. இந்த மாதிரி எத்தன கோஷ்டிங்கள பாத்தாச்சு! இவனுங்க மெரட்டலுக்கெல்லாம் அடி பணியிற ஆள் நான் இல்ல. சரி நீங்க கௌம் புங்க சாமி, நாளைக்கிப் பாப்போம்."

> "அந்த பேங்குல நான்தான் கொள்ளை அடிச்சேன்னு நம்ம தலைவருக்குத் தெரிஞ்சு போச்சு."
>
> "திட்டினாரா?"
>
> "நீ வேற. எப்படி மாட்டிக்காம கொள்ளை அடிக்கறதுன்னு கேட்டு கேட்டு உயிரை எடுக்கறாரு"
>
> - அஜித்லால்

அடுத்த நாள் காலையில் திருச்சி. மதியம் வரைக்கும் தாமதித்தால், செக் குக்கு பதிலாய்ப் பணமாகவே தந்து விடுவ தாய்ப் பார்ட்டி சொன்னதால், பணத் தைப் பெற்றுக் கொண்டு தாமதமாய்த் தான் திருச்சியில் பஸ் பிடிக்க முடிந்தது. மெட்ராஸ் வந்து சேருவதற்கு ராத்திரி மணி பத்தரையாகிவிட்டது. வீட்டுக்குப்

போகுமுன்னால், ஓவியனைப் பார்த்து விட்டுப் போக வேண்டுமென்று தோன்றியது. நேற்று ஒரு கோஷ்டி மிரட்டிவிட்டுப் போனதாய்ச் சொன்னானே!

ஓவியனுடைய இருப்பிடத்தை அடைந்தபோது அதிர்ச்சி! ஓவியன் பிளாட்பாரத்தில் அலங்கோலமாய்க் கிடந்தான். அவனுடைய நாய் அவன் முகத்தை நக்கிக் கொண்டு நின்றிருந்தது. கலர்ச் சாக்பீஸ்கள் சிதறிக் கிடந்தன. வர்ணக் கலவைகள் கொட்டிக் கிடந்தன. நடந்திருப்பது என்னவென்று புரிந்தது. நேற்று வந்து மிரட்டிவிட்டுப் போன கோஷ்டி, இன்றைக்கு வந்து அவனைப் புரட்டியெடுத்து



விட்டு போயிருக்கிறது.

நான் வந்த ஆட்டோவிலேயே, ஓவியனைத் தூக்கிக் கொண்டும்போய் தனியார் மருத்துவமனையில் சேர்த்தேன். சிகிச்சைக்குப் பிறகு கண் விழித்த ஓவியன், தான் படுத்துக்கிடக்கிற மேட்டுக்குடி சூழ்நிலையை நாலாபுறமும் பார்த்துவிட்டு, நன்றிப் பெருக்கோடு என்னைப் பார்த்துக் கரங்கூப்பினான். பிறகு, நடந்த கதையைச் சொன்னான்.

நான் நினைத்தது சரிதான். அந்தக் கறை வேஷ்டிக் கோஷ்டிகளிலொன்று வந்து மிரட்டிப்பார்த்திருக்கிறது. பணிய மறுத்த இவனைப் புரட்டிப் புரட்டி அடித்திருக்கிறது. 'என்னோட நாய் மட்டும் இல்லன்னா, என்னக் கொலையே பண்ணிப் போட்டுட்டுப் போயிருப்பானுங்க சாமி' என்று நன்றியோடு நாயை நினைவு கூர்ந்தான்.

நான் கேட்டேன், 'அவங்கதான் ஐந்நூறு ஆயிரம்னு தர்றாங்களேப்பா, அவங்க கேக்கற படத்த வரைஞ்சு குடுத்துர்றதுதானே. அப்படியே நீ தொழில் விருத்தி பண்ணி ஆயிர ஆயிரமா சம்பாதிக்கலாமே! பிளாட்பாரத்தில உண்டியல் குலுக்கி, நீ எந்தக் காலத்துல அவ்வளவு சம்பாதிக்கப் போற!'

ஓவியனுக்குக் கோபம் வந்துவிட்டது.

"சாமி, நா போலியோ மனுஷன்தான், போலி மனுஷனில்ல. காசுக்காகக் கட்சி மார்ற ஜாதியில்ல. கடவுளை வரைஞ்ச கையால, கண்டவங்களயும் வரையமாட்டேன். நான் சொன்னா சொன்னதுதான்."

"அதென்னப்பா அரசியல்வாதிங்க மேல அப்படியொரு கோபம் ஒனக்கு?" என்று அவனை நான் சாந்தப்படுத்தினேன்.

அவனை சுவாரஸ்யப்படுத்துவதற்காகவும் உற்சாகப்படுத்துவதற்காகவும், எனக்குத் தெரிந்த விசேஷமான ஒரு விஷயத்தை அவனோடு பகிர்ந்து கொள்ள முற்பட்டேன்.

"ஒனக்கு பேப்பர், பத்திரிகையெல்லாம் வாசிக்கிற வழக்கம் உண்டா? நீ என்னத்தப் படிச்சிருக்கப் போற. இப்ப நா சொல்லப் போற விஷயத்தக் கேளு. ஒனக்கு சந்தோஷமாயிருக்கும், தெம்பாயிருக்கும். அஞ்சாறு வருஷத்துக்கு முந்தி நடந்த சங்கதி. ஒரு கிராமத்தான். ஒன்னயப் போலவே போலியோ விக்ட்டிம். சூம்பிப் போன கால். ஆனா அவனோட மனசு சூம்பிப் போகல. தன்னம்பிக்கையாலயும் விடாமுயற்சியினாலயும் முன்னேறி, பஞ்சாயத்துத் தலைவரா ஆனான். அந்தக் கிராமத்துக்கே அவன் தலைவனப்பா! எல்லாப் பேப்பர்லயும் அவனோட ஃபோட்டோ வந்தது. எல்லாப் பத்திரிகையிலயும் அவனோட பேட்டி வந்தது. தமிழ்நாடு பூரா அவனைப்பத்தித்தான் பேச்சு. அரசியல்வாதிகள புத்திசாலித்தனமா பயன்படுத்திக்கிட்டு, அவன் முன்னுக்கு வந்துட்டான். நீயும் கொஞ்சம் காம்ப்ரமைஸ் பண்ணிக்கிட்டு, ஒன்னத் தேடி வர்ற அரசியல்வாதிகளைப் புத்திசாலித்தனமா பயன்படுத்திக்கிட்டேன்னா, நீயும் முன்னுக்கு வந்துரலாம். அந்த ஆளப் போலவே."

பெருமூச்சோடு அவன் என்னைப் பார்த்தான். பிறகு சொன்னான்.

"பாய் சாமி, நாந்தான் சாமி அந்த ஆள்." ●

'அலிப்பூர் சிறையிலிருந்த கைதிகளான எங்களுக்கு தலைக்குத் தேய்க்க எண்ணெய் கொடுக்கப்படவில்லை. ஆனால் அரவிந்த பாபுவின் முடி மினுமினுப்புடன் இருப்பதை நாங்கள் கவனித்தோம். 'தாங்கள் குளிக்கும்போது தலைக்கு ஏதாவது தைலம் உபயோகிக்கிறீர்களா?' என்று அவரைக் கேட்டேன். அவர், தாம் குளிப்பதேயில்லை என்று சொன்னதும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'அப்படியென்றால் உங்கள் முடி இவ்வளவு மினுமினுப்புடன் இருப்பதற்கு என்ன காரணம்?' என்று கேட்டேன். 'நான் யோக சாதனையில் முன்னேற முன்னேற, என் உடலில் சில மாற்றங்கள் ஏற்படுகின்றன. என் முடி உடலிலிருந்து கொழுப்பை எடுத்துக் கொள்கிறது!' என்றார் அவர்.'

(ச. மகாலிங்கம் எழுதிய 'ஸ்ரீஅரவிந்தர்' என்ற நூலிலிருந்து)

# அழைக்கிறது இந்தியா!



ஆன்மிக ரீதியாக முன்னேற விரும்பும் ஒருவர், தியானம் செய்தும் தவம் செய்தும் தமக்குத் தாமே நிகழ்த்தும் தனிப்பட்ட முயற்சியினால் தானே அந்த முன்னேற்றத்தை அடைய முடியும்! குருவருளும் திருவருளும் துணை நிற்கலாம். ஆனால் முயற்சி அந்தத் தனி ஜீவனுடையது தானே! எந்த முயற்சியுமில்லாமல் சுலபமாய்ப் பொருள் கொடுத்து வாங்க, ஆன்மிகம் கடைச் சரக்கல்லவே!

ஆன்மிக முன்னேற்றத்தை வேண்டி இடைவிடா தியானங்களில் பின்னாளில் தான் அரவிந்தர் ஈடுபட்டார். என்றாலும், வாழ்க்கை பற்றிய விசாரணையை அவர் மனம் இளம் வயதிலேயே மேற்கொள்ளத் தொடங்கி விட்டது. 'நடப்பது நடக்கட்டும்' என்ற திடசித்தம். உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதிலும், அச்சமில்லாத மன உறுதி. இவை அந்த விசாரணையின் பயன்கள்.

பொருளாதாரச் சிக்கல் வந்தபோது, அமைதியாகத் தம் வாழ்வைத் தாமே வேடிக்கை பார்க்கலானார். இறை சக்தி அவர் மன உறுதி குன்றிவிடாமல் ஒரு கவசமாய் அவரைப் பாதுகாத்துக் கொண்டிருந்தது. அது அவரில் இறங்கத் தருணம் தேடிக் கொண்டிருந்தது.

அதிமனம் தன்னில் இறங்குவதற்கான நெடும் முயற்சியை, அயர்வின்றி அவர் நிகழ்த்த வேண்டும். நிகழ்த்துவார். அத்தகைய காலம் அவர் வாழ்வில் அவருக்கு அருளப்படும். சிறைக் கதவுகள் இழுத்து மூடப்படும் போது இதயக்கதவுகள் படீரென்று திறக்கும். கேட்ட உதவியெல்லாம் கேட்கும் முன்னரே மேலிருந்து அவரை நோக்கிப் பூப்பூவாய்க் கொட்டும். கிருஷ்ணன் புல்லாங்குழலால் அவர் முதுகில் ஒரு தட்டுத் தட்டி, அவரைத் திரும்பிப் பார்க்கச் சொல்லிக் கலகலவென்று சிரிப்பான். திரும்பிய பக்கமெல்லாம் வாசுதேவனைக் கண்டு அவர் திகைப்பார். மண்ணில் தெரியும் வானம், அவர் வசப்படும். இறை சக்தியிடமிருந்து அவருக்கு உதவிகள் அப்போது கிடைக்கும். ஆனால்

திருப்பூர் கிருஷ்ணன்



அதுவரை?

**எ**ன்ன ஆச்சரியம்! அவரிடமிருந்தே அவருக்கு உதவிகள் கிடைக்கத் தொடங்கின! தந்தையால் பணம் அனுப்ப இயலாதபோது, சொல்லி வைத்தாற்போல் அவருக்கு கல்விக்கான உதவித் தொகை கிடைக்கலாயிற்று. இறுதி ஆண்டான ஐ.சி.எஸ். வகுப்பில், அவர் கிரீக், லத்தீன் பாடங்களில் மிக அதிக மதிப் பெண்களைப் பெற்றார். படிப்பை முடித்து வெளியேறும்போது, அரவிந்தர் சீனியர் கிளாசிகல் ஸ்காலர்ஷிப் பெறும் தகுதியைப் பெற்றுவிட்டார்.

ஆண்டுக்கு எண்பது பவுன், பிறகென்ன! தந்தையை எதிர்பாராமல் வாழ்க்கை நடத்த முடிகிறதே! அரவிந்த

அரவிந்த அமுதம் 6

ருக்கு ஒரு 'சிறப்பு அலவன்ஸ்' வேறு தனியே கிடைத்தது. ஆடம்பரத்தில் நாட்டமில்லாதவர் அவர். எளிய வாழ்க்கைக்குத் தேவையான தொகை அருளப்பட்டுவிட்டது.

அரவிந்தர் படிப்பில் பரிசுகளைக் குவித்துக் கொண்டிருந்தார். பரிசுகளுக்கான மொத்தக் குத்தகை அவருடையது தான்! கிரீக், லத்தீன் கவிதைப் போட்டிகளில், மறுபடி மறுபடி அவருக்கே பரிசு. ஓர் இந்திய மாணவர் இங்கிலாந்தில் இத்தனை பரிசுகளைக் குவிப்பதா! பார்த்தவர்கள் மூக்கின்மேல் விரல் வைத்தனர்.

ஆனால் எதனாலும் அரவிந்தரிடம் கர்வம் ஏற்படவில்லை. நிறைகுடங்கள் தளும்புவதில்லையே! முகத்தில் சாந்தம், செயல்களில் தீர்மானம், நடத்தையில் நிதானம். அவரிடம் பழகியவர்களை அவரது தூய தோற்றமும், நல்லியல்புகளும், வசீகரித்துக் கொண்டிருந்தன.

ஸ்ரீ அரவிந்தர் ஐ.சி.எஸ். எழுத்துத் தேர்வில் தேறினார். தேர்வின் இன்னொரு பகுதி குதிரைச் சவாரி. தறிகெட்டுச் செல்லும் மனக்குதிரையை அடக்குவதில் தேர்ச்சி பெற்ற அவர், சாதாரணக் குதிரைச் சவாரியில் நாட்டம் காட்டவில்லை. குதிரைச் சவாரியிலும் வெற்றி பெற்றால் தானே ஐ.சி.எஸ். அதிகாரி ஆக முடியும்! ஆனால் அவர் அந்தத் தேர்வுக்குச் செல்லவே இல்லை. இரண்டாவது வாய்ப்பும் தரப்பட்டது. அதையும் நிராகரித்தார். தமது இலக்கு ஐ.சி.எஸ். அல்ல என்று தோன்றியது அவருக்கு.

அரவிந்தரிடம் அரசியல் சிந்தனைகள் எழலாயின. தந்தை கோஷ் ஆங்கில நாகரிக மோகத்தோடு இருந்ததென்னவோ மெய்தான். ஆனால் அவரிடம் இந்திய தேசப்பற்றும் இருக்கத்தான் செய்தது. ஆங்கில ஆட்சியில் இந்தியர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளைக் கண்டு அவர் குமுறினார். இங்கிலாந்திலிருந்த தம் புதல்வருக்கு, இந்தியாவிலிருந்து 'வங்காளி' என்ற பத்திரிகையை அனுப்பலானார். அதில் ஆங்கிலேய அடக்கு முறை பற்றிய செய்திகள் இடம் பெற்றிருந்தன. தாம் எழுதிய கடிதங்களிலும், இதயமற்ற பிரிட்டிஷ் அரசாங்கத்தை, கோஷ் வெகுண்டு கண்டனம் செய்து வந்தார்.

## அருள்வாக்கு

மக்களுக்கு நன்மை பயப்பதாகவும் பிரியமாகவும் எது இருக்கிறதோ, அதுவே சத்தியம் என்பதாக சத்தியத்துக்கு ஒரு லட்சணத்தை வகுத்திருக்கிறார்கள்.

**ஸத்யம் பூதஹிதம் ப்ரியம்**

பேச்சினாலும், காரியத்தினாலும், எண்ணத்தினாலும் பிராணிகளுக்கு நன்மையை உண்டாக்குவதே சத்தியம். கெடுதல் செய்வதெல்லாம் அசத்தியமே.

ஏதோ ஒரு பெரிய செயல் செய்யவே தாம் பிறந்திருப்பதாக அரவிந்தருக்கு அடிக்கடித் தோன்றும். 'என்ன செயல் செய்யப் போகிறோம்? எந்தத் துறையில்? ஒரு வேளை அரசியல் துறையிலா? நாட்டு விடுதலைக்காகப் பாடுபடப்போகிறோமா?' யோசனை எழுந்தது அவரிடம். அரசியலில் ஆர்வம் காட்டலானார்.

சில இந்திய மாணவர்கள் தொடங்கிய 'இந்தியன் மஜ்லிஸ்' சங்கத்தில் செயலாளரானார். இந்தியாவின் பூரண சுதந்திரத்தை ஆதரித்து, மேடைகளில் முழங்கலானார். 'தாமரையும் குத்துவாளும்' என்ற ரகசிய சங்கத்தில் உறுப்பினரானார். ஒரே ஒரு கூட்டம் தான் நடத்தியது அது. 'அந்தச் சங்கம் செத்துப் பிறந்தது' என்று பின்னாளில் சொன்னார் அரவிந்தர். ஆனால் அன்னிய ஆட்சியை இந்தியாவிலிருந்து அகற்ற வேண்டும் என்று, அதன் முதலும் கடைசியுமான கூட்டத்தில் சபதம் மேற்கொண்டார். அந்தச் சபதத்தை அவர் மறக்கவே இல்லை.

பரோடா மன்னர் அப்போது இங்கிலாந்தில் இருந்தார். அவரது சமஸ்தானத்தில் கொஞ்ச காலம் வேலை. ஏழு வயது முதல் இருபத்தியோரு வயது வரை, சுமார் பதினான்கு ஆண்டுகள் இங்கிலாந்தில் வாழ்க்கை என்ற போதும், அரவிந்தருக்கு இங்கிலாந்தின் மேல் எந்தப் பிடிப்பும் ஏற்படவில்லை. 1893ல் இந்தியாவுக்குப் புறப்பட ஆயத்தமானார்.

ஒருவனுக்கு நல்லதைச் சொன்னால் மட்டும் போதாது. அதை அவன் ஏற்றுக் கொள்ளுமாறு அன்புடன் சொல்ல வேண்டும். நல்லதைக் கூட கடுமையாகச் சொன்னால், அதை யாரும் ஏற்கமாட்டார்கள். இவ்வாறு நிஷ்பலனாகப் போகிற நல்ல வாக்கு சத்தியமாகாது. நல்லதாகவும் இருக்க வேண்டும். அது யாரை உத்தேசித்துச் சொல்லப்படுகிறதோ, அவனுக்கு இன்பம் தரும் விதத்தில் ஹிதமாகவும் சொல்லப்பட வேண்டும். இதுவே சத்தியம்.



'சத்தியத்தைச் சொல். பிரியமானதைச் சொல். சத்தியத்தைப் பிரியமாகச் சொல்ல முடியவில்லை என்றால், அப்போது அப்படிப்பட்ட சத்தியத்தையும் சொல்லாதே. கேட்கப் பிரியமாயிருந்தாலும், அசத்தியத்தைச் சொல்லாதே' என்பது பெரியோர் வாக்கு.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

**ஸ்ரீ** அரவிந்தர் இங்கிலாந்தை விட்டு ருமேனியா என்ற கப்பலில் இந்தியாவுக்குப் புறப்பட்டு விட்டதாக, அரவிந்தரின் தந்தை கோஷுக்குத் தந்தி வந்து சேர்ந்தது. தந்தியா அது! அல்ல. காகித வடிவிலிருந்த கல்கண்டு! தந்தியை மறுபடி மறுபடி வாசித்தார் கோஷ். கண்ணால் அந்த இனிப்பைப் பருகினார். ஆனந்தத்தில் இதயம் தளும்பியது. அந்தச் சேதியை நெஞ்சம் தித்திக்க, நினைத்து நினைத்து மகிழ்ந்தார்.

'எத்தனை நாளாயிற்று மகனைப் பார்த்து! மகனை வெளிநாட்டில் விட்டு விட்டு, என்ன வாழ்க்கை இந்த வாழ்க்கை! இதோ வந்துவிடுவான் என் மகன். அவனது இங்கிலாந்து வாசம் முடிந்தது. இனிமேல் பாரதத்திலேயே இருப்பான். அவன்மேல் பாசத்தைப் பொழியாமல், வேலை வேலை என்று பறந்து கொண்டிருந்தேனே! என்ன கண்டேன் அந்த வேலையில், கொஞ்சம் பணத்தையும் ஓயாது வேலை செய்ததால் ஏற்பட்ட இந்த இதய நோயையும் தவிர! போதும். போதும். பணத்தைக் கொடுத்து இது போல் தூய நற்குணங்கள் நிறைந்த ஒரு புத்திசாலியான மகனை விலைக்கு வாங்க முடியுமா! என் மகன். என் செல்வம். விட்டுப் பிரிந்ததெல்லாம் போதுமடா என் தங்கமே! வா! வந்துவிடு. என் வாழ்க்கைக்கு அர்த்தம் கொடு. நம் இல்லத்தை உன் பாசத்தால் கலகலப்பாக்கு. நீ வந்த பிறகாவது என் இதயம் வலிமை பெறட்டும். என் ஆரோக்கியம் சீராகட்டும்.'

மகன் வருவான் வருவான் என்று வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தது பெற்ற தந்தையின் பாச மனம். ஆனால் அதற்கும் முன்பாக வந்தது மறுபடியும் ஒரு தந்தி. இது என்ன இரண்டாம் தந்தி! தெய்வமே! நெஞ்சம் படபடக்கத் தந்தியைப் பிரித்துப் படித்தார்.

ருமேனியா என்ற அந்தக் கப்பல் போர்ச்சுகல் கரையோரம் மூழ்கிவிட்டது என்றும், அதில் பயணம் செய்த யாரும் உயிரோடு தப்பவில்லை என்றும், அந்தத் தந்தியில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. அந்தச் செய்தி உண்மைதான். இதயத்தைப் பிடித்துக் கொண்டு, அப்படியே நெடிய மரம் விழுந்ததுபோல் தரையில் சாய்ந்தார், கோஷ். அவர் கனவுகள் அனைத்தும் சரிந்து மண்ணோடு மண்ணாயின.

'அரவிந்தா! அரவிந்தா!' என்று மீண்டும் மீண்டும் புலம்பினார். அது ஒரு புனிதத் திருநாமம். இறக்கும் தறுவாயில் அதைச் சொன்னால் புண்ணியம் தான். அன்றிரவு நெடுநேரம் தூங்காமல் பெருமூச்சு விட்டபடி படுத்திருந்தார். அப்படியே மீளாத நிரந்தரத் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டார்.

ஸ்ரீ அரவிந்தர் என்ன ஆனார்?

(அமுதம் பெருகும்)

தற்போது ஈ-மெயில் சேவையிலும் இறங்கப் போகிறது Google. அதிலும் புரட்சிகரமாக ஒவ்வொருவருக்கும் 1000 MB வரை சேமித்துக் கொள்ளும் வசதி தரவிருக்கிறது. அதுவும் இலவசமாக! நீங்கள் அனுப்பிய அல்லது பெற்றுக் கொண்ட மெயிலை, search மூலம் தேடி எடுக்கும் வசதியும் தரவிருக்கிறது. தேவையற்ற விளம்பரங்கள், இல்லை. மெயில்களை delete செய்யும் அவசியம் இல்லை என்று கூறும் gmail.google.com தற்போது இதற்கான சோதனை முயற்சியை நடத்தி வருகிறது.

(உங்களுக்கும் வேணும்னா - இப்பவே 'துண்டு' போட்டு வையுங்க!)



• ஜூலியா ராபர்ட்ஸ்



• டி.காஃப்ரியோ

# 'ஐஸ்' இல்லாத அழகுப் பட்டியல்!

குக்கிராமங்களில் வாழும் மக்களின் மகத்தான கண்டுபிடிப்புகளை வெளிச்சத்துக்குக் கொண்டு வர உதவுகிறது 'ரூரல் இன்வென்ஷன் நெட் வொர்க்' - கிராம மக்களின் அனுபவ ரீதியான அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு அங்கீகாரம் பெற்றுத் தரவும், பிரபலப்படுத்தவும் உதவுகிறது (www.rinovations.org) கர்நாடக மாநில 70 வயது விவசாயி - அன்னா என்பவரின் வர்ஷா ரெயின் கன் - 40 - 50% நீரைச் சேமிக்க உதவுமாம். செல்ல முத்து என்ற ஈரோடு மாவட்டக்காரரின் - கண்டுபிடிப்பான பயோ-அஸ்த்திரா என்ற பூச்சிக் கொல்லி - NIFன் விருது பெற்றது. பால் கறக்கும் யந்திரம், சிபாளி வாழை ஊசி என பட்டியல் நீளுகிறது!

(நம்ம ராமர்பிள்ளை கண்டுபிடிப்பு பற்றி தகவல் ஏதும் இல்லீங்க!)

'People' என்ற அமெரிக்க இதழ் உலகின் ஐம்பது அழகான மனிதர்களின் பட்டியலை வெளியிட்டுள்ளது. ஜேம்ஸ் பாண்ட் நாயகி ஹாலே பெர்ரி (Halle Berry) ஏழுமுறையும் - ஜூலியா ராபர்ட்ஸ் எட்டு முறையும் இந்தப் பட்டியலில் இடம் பிடித்துள்ளனராம். பிரிட்னி, நோராஜோன்ஸ், சல்மா ஹையக் போன்ற நடிகைகளும், பென் அஃப்லெக், லியானார்டோ - டிகாஃப்ரியோ போன்ற நடிகர்களும் - என ஹாலிவுட் ஸ்டார்களே ஆக்கிரமித்துள்ளனர்.

(பருப்பில்லாம சாம்பாரா? நம்ம 'ஐஸ்' இல்லாம அழகுப் பட்டியலா? சீச்சீ!)

**ஜாலி - SMS**

அதிகப்படியான அறிவை என் வசம் வைத்திருந்ததால், போலீஸ் என்னைக் கைது செய்துவிட்டது. பெயிலில் எடுக்க மூளையே இல்லாத ஒருவர் வரவேண்டுமாம். நண்பனே... நீ எங்கே இருக்கிறாய்?

- முகில்

**ஜோக்:**




மடப்பசங்க, இந்த வீட்டை இன்னும் எவனும் வாங்கலையாம்! நாம முந்திக்குவோம்

# கோவில்

கிருஷ்ணா

அந்தச் சாமியாடியின் முன் பயபக்தியுடன் அமர்ந்திருந்தோம். முருகன் அவர்மேல் எழுந்தருளி குறி சொல்லுவாராம்.

அருகில் அமர்ந்திருந்த நண்பன் திருமலையைப் பார்த்தேன். கண்களாலேயே அமைதி காக்கச் சொன்னான். இந்த மாதிரி அருள்வாக்குக் கேட்பது எனக்கு இதுதான் முதன்முறை.

எனது வியாபாரம் ஜரூராக நடந்து வருகிறது. பிரச்னை இப்போது குடும்பத்தில்தான். கல்லூரிப் படிப்பை முடித்த மகன் இன்னமும் விடலையாகவே திரிகிறான். 'பொறுப்பு என்றால் கிலோ என்ன விலை?' என்கிறான். திடீரென உடல் சுகவீனம் ஆகிவிட்டது மனைவிக்கு. கருப்பையில் கட்டி, இரத்த அழுத்தம் என்று பட்டியலிடு கிறார் மருத்துவர்.

வாழ்க்கையில் முதன் முறையாய் பயம் வந்தது. பள்ளிக் கூடத் தோழன் திருமலை. அவனின் ஆலோசனையின்படி முருகன் அருள் பெற வந்து சரணடைந்துவிட்டேன்.

''கவலைப்படாதே. எல்லாமே சரியாயிடும். தற்காலிகமான கவலைதான் எல்லாம். உன் ஜாதகப்படி கோவில் கட்டற யோக்கியதை அமைஞ்சிருக்கேப்பா. கட்ட ஆரம்பி. எல்லாம் சரியாயிடும்'' என்றார் சாமியாடி.

''கோவில்னா... என்ன கோவில்' பிள்ளையார் கோவிலா, முருகன் கோவிலா, சக்தி கோவிலா?'' திருமலைதான் சந்தேகத்தை எழுப்பினான்.

'நீ காரியத்துல இறங்கு, முருகன் மூலமா உனக்கு தானாகவே செய்ய வேண்டியது என்னன்னு தெளிவு வரும். போ!''

அருள் பெற்று வெளியே வந்தோம்.

திடீர் என ஒரு எண்ணம்.

''திருமலை, நம்ம கிராமத்திலே கோவில் கட்டினால் என்ன?''

திருமலை என் கையைப் பிடித்துக் குலுக்கினான். "நல்ல யோசனை. நம்ம கிளைகள் பட்டணத்திலே இருந்தாலும், வேர் கிராமத்திலேதான்னு சொல்லாமல் சொல்லிட்டே'' என்று சந்தோஷப்பட்டான்.

எங்களின் திடீர் வருகையால், அந்த சிறிய கிராமம் பரபரப்பானது. கிராமத்தில் என் சித்தப்பா குடும்பம் இருக்கிறது. எங்கள் குடும்ப நிலங்களைச்



சாகுபடி செய்து வருகிறார் அவர்.

விஷயத்தை சித்தப்பாவிடம் பிரஸ்தாபித்தேன்.

"முதல்ல ஊரைச் சுற்றிப் பாருப்பா. எந்த இடம் பிடிச்சிருக்கோ, அதுல கட்டிடலாம். எல்லாம் நம்ம பயலுக தான்" என்றார்.

அடுத்த நாள் காலையில் ஊரைச் சுற்றி வரலாம் என்ற நினைப்புடன், ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

அன்று இரவு பெரிய மழை, காற்றும், மழையும், இடி, மின்னலுமாய் ஊரை ஆட்டுவித்துவிட்டு ஓய்ந்தது.

காலையில் கண்விழித்ததும் முதல் செய்தியாய் தகவல் கிடைத்தது.

"ஊரின் பள்ளிக் கட்டடத்தின்மீது மரம் விழுந்து, கூரையும், சுவரும் இடிந்து போய் விட்டது" என்றார் சித்தப்பா.

பள்ளிக்கூடத்தின் அருகே கிட்டத்தட்ட மொத்த கிராமமும் கூடியிருந்தது. பல வருடங்களாய் நிழல் தந்து கொண்டிருந்த பெரிய வேப்ப மரம், தலை சாய்ந்து கிடந்தது.

நான் படித்தது கூட இந்தப் பள்ளிக் கூடத்தில்தான். எட்டாவது வகுப்பு வரை உள்ள நடுநிலைப் பள்ளி இது.

வீடு திரும்பி, குளித்து, சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது சித்தப்பா தான் பேச்சை ஆரம்பித்தார்.

"ஏம்பா, பள்ளிக் கூடம் என்பதும் கோவில்தானே! அதனாலே தானே சரஸ்வதிக்குத் தனியாய் கோவில் கட்டறதில்லை! தெரியும்தானே? நம்ம ஊரில் ஏற்கெனவே நம்ம சின்ன கிராமத்திலே ரெண்டு கோவில் இருக்கிறது மூன்றாவதாய் எதுக்கு ஒரு கோவில்? கோவிலுக்குச் செலவழிக்க நினைக்கற பணத்தின் மூலமாய் நம்ம ஊர் பள்ளிக் கூடத்தை நல்ல கான் கிரீட் கட்டடமாய் கட்டித் தந்துடேன்."

சித்தப்பாவின் கோரிக்கையில் கட்டுண்டு, நிமிர்ந்து பார்த்தேன். எதிரே சுவரில் இருந்த காலண்டரில் முருகன் சிரித்துக் கொண்டிருந்தான்.

## கோடி கோடி பாராட்டுகள்!

பதினைந்து ரீலில் ஒரு வித்தியாசமான கதையம்சம் கொண்ட விறுவிறுப்பான திரைப்படம் பார்த்த மன நிறைவை அளித்தது கோடி கோடி மின்னல்கள். ராஜேஷ்குமாருக்கு கோடி கோடி பாராட்டுகள்!

அயன்புரம், த. சத்தியநாராயணன்

அபாரம், அற்புதம், அருமை, பாராட்டுகள் என்பதையெல்லாம் கடந்து பாராட்டி மகிழ வார்த்தைகளைத் தேடினேன், கிடைக்கவில்லை. ராஜேஷ்குமார் மேற்கண்ட வார்த்தைகளையே கோடி, கோடியாய் சொன்னதாக ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன்.

பெங்களூர் - 21, ப. மூர்த்தி

பதின்மூன்று வாரங்கள், மிக அருமையாக; புதுமையாக போய்க் கொண்டிருந்த கதை, திடீரெனத் தடம்புரண்டு யாரும் எதிர்பார்க்காத சாதாரண முடிவுடன் முடிந்து விட்டது. 'ராஜேஷ்குமார்' மீது சற்று கோபம் தான். எங்கேயோ போக வேண்டிய கதையை ஆயிரத்தோடு, ஆயிரத்தொன்றாக ஆக்கிவிட்டாரே என்று!



சென்னை - 28 காஞ்சனா ராதாகிருஷ்ணன்

ராஜேஷ்குமார் தொடர் என்றால் ஒரு 'த்ரில்' எப்போதுமே இருக்கும். அது இதிலும் இருந்தது. வெல்டன்!

சென்னை - 39, சிம்மவாஹினி

ராஜேஷ்குமாரின் எழுத்து என்றாலே அதிலே ஒரு 'கிக்' இருக்கும். அது என்ன என்ன விஞ்ஞானக் கலவையில் கதைக் கருவுடன் சேர்க்கப்படுகிறது என்பது ரகசியம். பரமரகசியம்.

சென்னை - 78, கே.எஸ். நாராயணன்

# சின்னத் திரையில் கவுசல்யா!

"இப்பதானே சஹானா வந்தா? அதுக்குள்ளே சீரியல் முடிஞ்சுடுச்சா?" என்று கவலைப்படும் அளவுக்கு, வேகமெடுத்த 'சஹானா' தொடர் விரைவில் முடிகிறது. அதைத் தொடர்ந்து 'எதிர் நீச்சல்' தொடரை ஆரம்பித்து, டீ.வி ரசிக சிகாமணிகளின் வயிற்றில் பாலை வார்த்திருக்கிறது மின்பிம்பங்கள்.

'எதிர்நீச்சல்' என்றதும், நாகேஷ் நடித்த மாடிப்படி மாதுவின் கதை, பட்டு, கிட்டு, மாதவன் நாயர் என்றெல்லாம் பார்ட் டூ கிளம்பப் போகிறது என்று கற்பனை செய்ய வேண்டாம். இது லேட்டஸ்ட் எதிர் நீச்சல்!

யமுனா, தீபா, நிலா, பாரதி, தேவி என்ற ஐந்து கல்லூரித் தோழிகளின் நட்பின் கதையாம். ஃபிரண்ட்ஸ் விஜயலட்சுமி, சிந்து, அம்மு, திவ்யதர்ஷினி, விஜய் ஆதிராஜ், கௌதம், விஜயசாரதி என்று நட்சத்திரப் பட்டாளமே சந்தோஷ நீச்சலடிக்கிறது.



• எதிர்நீச்சலில்

முப்பது பேர் கொண்ட மெட்டி ஒலி டீம், சிங்கப்பூர் சென்று வந்திருக்கிறது. அங்கே இவர்கள் வழங்கிய கலை நிகழ்ச்சிக்குப் பெரும் வரவேற்பாம்!

சிங்கப்பூர் இன்டோர் ஆடிடோரியத்தில் நாலுமணி நேரம் கலை நிகழ்ச்சி. வழக்கமான பாணியில் சினிமாப் பாடல்களுக்காக டான்ஸ் ஆடினார்கள் என்றாலும், மெட்டி ஒலியையும் அதனுடன் இணைத்திருந்ததுதான் புத்திசாலித்தனம்!

சேத்தனும், காயத்ரியும், ஒரு சினிமாப் பாடலுக்கு டான்ஸ் ஆடி முடிக்கும் தருணத்தில், மெட்டி ஒலி மாமியார் கேரக்டர் மேடைக்கு வந்து, தன் வழக்கமான பாணியில், "இங்க என்ன ஆட்டம் வேண்டிக்கிடக்கு?" என்று கத்த, ஆட்டம் கப்சிப்! பிறகு அடுத்த பாடலுக்கு டான்ஸ்!



• கவுசல்யா

சினிமாவுக்கு முயன்று கொண்டிருந்த சி.ஜே.பாஸ்கர், திரும்பவும் டீ.வி. சீரியலுக்கே வந்து விட்டார். 'மனைவி' என்ற பெயரில் தொடர் ஒன்றை இயக்கி வருகிறார். இந்தத் தொடரில் நடிகை கவுசல்யாவை சின்னத்திரைக்குள் களமிறக்கி இருக்கிறார்களாம்!

- அனு, சி.எம்

# நீங்கள் கேட்டவை

# டெஸ்மாவை நீட்டித்துள்ளதே தமிழக அரசு..?

● கா.மு.சுந்தரம், சிலமலை.

***? அயோத்தி பிரச்னைக்கு, நீதிமன்றம் மூலம் தீர்வு காண்பதே சரியான வழி என சோனியா காந்தி கூறியுள்ளாரே...?***

! நீதி மன்றத் தீர்ப்பையே ஏற்கமாட்டோம் என்று முரண்டு பிடிப்பவர்கள் நாட்டில் அதிகமாகி வருவது தான் ஆபத்து. அதில் ஒரு காங்கிரஸ் முதல்வரும் உண்டு.

• சிண்டு முடியும்...

● ஆர். மணிமேகலை, மருங்கப்பள்ளம்.

***? ப்ரியங்காவைவிட ராகுல் நல்ல தலைவர் என்று வெளிப்பட்டுள்ள கருத்துக் கணிப்பு முடிவு, நம் மக்களுடைய ஆணாதிக்க மன நிலையைத்தானே காட்டுகிறது?...***

! இதென்னய்யா சிண்டு முடிகிற அபிப்பிராய வாக்கெடுப்பு! அதே குடும்பத்தில் கமலா நேரு, இந்திரா காந்தி, சோனியா காந்தி, ஆகியோரைத் தலைமைப் பொறுப்புக்கு ஏற்றவர்கள்தானே நம் மக்கள்? அப்புறம் ஆணாதிக்கமாவது மண்ணாங்கட்டியாவது!



• ...கணிப்பு!

● பாளை பசும்பொன், மகாராஜநகர்

***? அழகிய தலைப்புகளில் தமிழ்ப்படம் வந்தாலென்ன?...***

! 'யூத்', 'கேம்பஸ்ல', 'லவ்ஸ்' விட்டு, கில்லி அடிச்சு, 'குத்து' விடுகிற படங்களுக்கு மத்தியிலே, இப்போதைக்கு எல்லாம் 'ட்ரீம்ஸ்'தான்!

● பா. அச்சுதன், வயலூர்

***? எது வாழ்க்கை?...***

! சமீபத்தில் முப்பத்தியோராவது பிறந்த நாள் கொண்டாடினார் அந்த இந்தியக் கிரிக்கெட் கடவுள்! வந்து குவிந்தன பரிசுகள். அவற்றில் தமது ஐந்து வயது மகள் சாரா, தானே வரைந்து தந்த வாழ்த்து அட்டையைப் பொக்கிஷமாக மதிப்பதாகப் பெருமையுடன் பேட்டி கொடுத்தார் அந்த அப்பா - அன்பும் நிறைவும் தான் வாழ்க்கை என்று சொல்லாமல் சொல்லி...

● என். பாலகிருஷ்ணன், மதுரை

***? 'அடிக்கிற கைதான் அணைக்கும்' என்பதற்கும் 'அணைக்கிற கைதான் அடிக்கும்' என்பதற்கும் ஏதேனும் வித்தியாசம் உண்டா...?***

! இரண்டு வரிக்கும் நடுவே 'தே.மு; தே.பி' அப்படின்னு சேர்த்துக்கச் சொல்றாங்க, அரசு ஊழியர்களும் ஆசிரியர்களும்.

● கே.என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்-1

***? ஜார்ஜ் புஷ் மறுபடியும் அதிபராகத் தேர்ந்தெடுக்கப்படுவாரா...?***

! தேர்தலுக்கு முன்னால் ஈராக்கிலிருந்து வாபஸ் வாங்கி, அமெரிக்க மக்களைக் கவர ஏதேனும் அற்புதம் செய்து காட்டினால் வாய்ப்பு உண்டு.

● எஸ்.நிஷா, பாம்பன்

***? கலைஞரிடம் கேட்டது போல் வில்லங்கமான***

● இ. கஸ்தூரி, கல்விடைக்குறிச்சி

***? அண்ணாச்சிக்குக் கிடைத்த தீர்ப்பு பற்றி...?***

! தண்டனை குறைவு என்று அரசு மேல் முறையீடு, தண்டனை அதிகம் என்று அண்ணாச்சி மேல் முறையீடு! - இரண்டுமே தேவையில்லை என்பது தராசு தீர்ப்பு! அரசு பெருந்தன்மை காட்ட வேண்டும்; அண்ணாச்சி நல்லொழுக்க அடிப்படையில் முன் கூட்டியே வெளியே வர, முனைப்பு காட்ட வேண்டும். பொது வாழ்வைத் துறந்து ஆன்மிகச் சிந்தனையில் மட்டும் ஈடுபடுவது அவருக்கு நல்லது.



• 'ராஜ'தண்டனை!



• 'வெங்காய'க் கனவு

● மகா, திருப்பூர்-3

*? தேர்தலுக்குப் பிறகு காங்கிரஸ் காணாமல் போய் விடும் என்கிறாரே வெங்கய்ய நாயுடு...?*

! வெங்காயம்!

*கேள்விகளை நமது நிருபர்கள் ஜெயலலிதாவிடம் கேட்பார்களா...? அவ்வாறு கேட்டால் எப்படி எதிர்கொள்வார்...?*

! அது கேள்வி கேட்கிற மீடியாவைப் பொறுத்தது. என்.டி.டிவியில் கேட்டால் பொறுமையாகவும் சாமர்த்தியமாகவும் தமது செயல்களை நியாயப்படுத்திப் பேசுவார். லோகல் ஆளுங்க கேட்டா... வேணாங்க! இருக்கிற இரண்டு 'அவதூறு' வழக்குகளே போதும்!

● கல்லார் ரஹ்மத், நாகை

*? தி.மு.க. ஆபத்தானது என்பதற்கு இந்தக் கல்வீச்சு சம்பவமே போதும் என ஜெயலலிதா கூறுவது பற்றி...?*

! தர்மபுரி பஸ் எரிப்பு, பிளஸன்ட் ஸ்டே வழக்கில் தீர்ப்பு வெளியானபோது விளைந்த வன்முறை, மயிலாடுதுறையில் மணிசங்கர் அய்யருக்கு நேர்ந்தது... இவையெல்லாம்...?

● என். கருமாறன், காரைக்கால்

*? டெஸ்மாவை மேலும் ஆறு மாத காலத்துக்கு நீட்டித்துள்ளதே தமிழக அரசு?*

! அடக்குமுறைக்கு உதவியாக அவசரச் சட்ட நீடிப்பு இல்லையெனில், ஏற்கெனவே அரசு ஊழியர்கள் மீது எடுக்கப்பட்டுள்ள கடுமையான நடவடிக்கைகள் பல, சட்ட விரோதமாகிவிடும்! எனவேதான் ஆறுமாத நீடிப்பு. சட்டம் இங்கு நிறைவேற்றி, ஜனாதிபதி ஒப்புதல் பெற அவகாசம் உருவாக்கிக் கொள்கிறார் முதல்வர். இந்த நிலையில்தான் அரசு ஊழியர்களைப் பாதிக்கும் எந்த நடவடிக்கையிலும் இந்த அரசு ஈடுபடாது என்று தேர்தலையொட்டி அறிக்கை விடுகிறார்! எப்படி நம்புவது?

● என். குப்புசாமி, வெங்கிடாபுரம்

*? பெண்களின் ஆதரவு வாஜ்பாய்க்கா சோனியாவுக்கா...?*

! தமிழகத்தைப் பொறுத்தவரை தண்ணீர்க் குடத்துக்கு!

● ஜி.ராமதாஸ், உள்ளிக்கடை போஸ்ட்

*? கலைஞரின் தனிப்பட்ட கருத்துகளிலிருந்து மாறுபட்டு தி.மு.கவினர் முடிவெடுத்த சம்பவங்கள் உண்டா...?*

! நிறையவே உண்டு. முக்கியமாக அவரது நாத்திகக் கொள்கையில் தி.மு.கவினர் பலருக்கு ஒப்புதல் இல்லை. அரசியல் ரீதியிலும், கட்சிக்குள் உயர்மட்டத்திலும் மாற்றுக் கருத்துக்கள் அலசப்படுவதுண்டு. ஆனால் யார் என்ன கருத்து கொண்டிருந்தார்கள் என்பது வெளியே வராமல், இறுதி முடிவுக்கு அனைவரும் கட்டுப்படுவதே அந்தக் கட்சியின் பலம்.

● எம். ராஜேந்திரன், லால்குடி

*? யாருக்கும் ஆதரவு தெரிவிக்கவில்லையென டெல்லியில் ரஜினி பேசியுள்ளாரே...*

! அவருடைய பேச்சுகள், அறிக்கைகள், செயல்பாடுகள் ஒரு புறம்; ரசிகர் மன்றத்தின் போக்கு மறுபுறம். இரண்டிலுமே முரண்பாடுகள் காணப்படுகின்றன. அவர் மிகவும் குழம்பிப் போயிருப்பதாகத் தோன்றுகிறது. இந்தத் தேர்தலில் அவர் தெளிவாக ஒரு வழிகாட்டல் தரத் தவறியது துரதிர்ஷ்டமே.



• 'சூப்பர்' குழப்பம்

❑ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

ஆர். மணிமேகலை,
த/பெ. வி. இராமையான்,
மருங்கப்பள்ளம் - 614 802
பேராவூரணி வட்டம், தஞ்சை மாவட்டம்

• ரூ. 50/- பரிசு பெறுபவர்:

க.மு.சுந்தரம்,
4/146, அஞ்சலகத் தெரு,
சிலமலை - 625 528
தேனி

# ஜூரி இருந்த காலம்!

அமரர் தேவனுக்கு அவருடைய வாழ்நாளில் தம்முடைய ஒரு எழுத்தைக் கூட நூல் வடிவில் பார்க்கும் பேறு கிட்டவில்லை. அதனாலென்ன? தேவன் கடும் உழைப்பின் பேரில் உருவாக்கிய 'ஜஸ்டிஸ் ஜகந்நாதன்', இப்போது ஆங்கில மொழியிலும் வெளிவந்து விட்டது. ''எண்பத்தைந்து சதவிகிதம் கதை, நீதிமன்ற வளாகத்திலேயே நிகழ்கிறது'' என்று குறிப்பிட்டார், பிரபல வழக்குரைஞரும் நாரத கான சபா செயலாளருமான ஆர். கிருஷ்ணசுவாமி. ஒவ்வொரு அத்தியாயத்தின் தலைப்பிலும், சட்ட விதிகளின் தமிழ் வடிவத்தை முத்தாய்ப்பாக வைத்து விட்டு, தேவன் இந்தக் கதையை எழுதினார். ஒவ்வொரு தமிழ் வடிவத்துக்குமான ஆங்கில மூலத்தைத் தேடித் தந்து, அரும் பணியாற்றியவர் இவர்.



* விழாவில்

'ஒரிஜினல் நாவலை, ஆங்கிலத்தில் இன்னொரு ஒரிஜினலாகவே மொழிமாற்றம் செய்திருக்கிறார்' என்று பாராட்டிய கிருஷ்ண சுவாமி, ஓர் அருமையான எடுத்துக்காட்டையும் தந்தார். ஜகந்நாதனின் தலைமயிர் 'கறுப்பும் வெளுப்புமாய்' இருக்கும் என்று தேவன் எழுதியிருப்பதை, வெகு நயமாக ஆங்கில மரபில் 'Like pepper and salt' (மிளகையும் உப்பையும் போல்) என்று எழுதியிருக்கிறார் மொழி மாற்றம் செய்தவர். தேவன் கதை எழுதிய ஐம்பதுகளின் இடைப் பகுதிவரை, 'ஜூரி' என்கிற கற்றறிந்த நடுநிலையாளர்கள் இருந்ததுண்டு. நீதிபதி தீர்ப்பு வழங்கும் முன், ஜூரர்களையும் கலந்தாலோசிப்பது மரபு. இப்போது அந்தப் பழக்கமே இல்லாமல் போய் விட்டது. இதைப் பற்றியும் குறிப்பிட்டார் கிருஷ்ண சுவாமி.

தென்னக ரெயில்வேயின் பொது மேலாளர் வி.ஆனந்த், நூலை வெளியிட்டுப் பேசுகையில், 'ஒரு சின்ன ரத்தக் காயம் பற்றிக்கூட எழுதாமல் உருவாக்கிய துப்பறியும் சாம்பு' என்று குறிப்பிட்டு, தேவனின் மென்மையான உள்ளத்தைக் காட்டினார். ''தேவன் எழுதிய மல்லாரி ராவ் கதைகள், எல்லா மொழிகளிலும் வெளிவர வேண்டும். குறிப்பாக, மராத்தியில் எழுதப்பட வேண்டும்'' என்றும் சொன்னார்.

'தி ஹிந்து' நாளேட்டின் இலக்கிய விமர்சகர், லெக்ஷ்மி வேங்கடராமன் தம்முடைய முதல் முயற்சியாக, தேவனை தமிழிலிருந்து ஆங்கிலத்துக்குக் கொண்டு போயிருக்கிறார், ஓய்வு பெற்ற காவல் துறை உயர் அதிகாரி வி.கிருஷ்ண மூர்த்தி, இந்த ஆங்கில வடிவத்தை 'எடிட்' செய்து உதவியிருக்கிறார்.

- சுப்ர. பாலன்

படம் : யோகா




# ஆஸ்துமாவும், ஆத்மாவும்!

● டாக்டர் ஸ்ரீதருடன் சுகி. சிவம்

"'ஆஸ்துமா' பற்றிய விழிப்புணர்வு இல்லாத காரணத்தால் தான் இன்று உலகில் ஏராளமானவர்கள் வயது வித்தியாசமில்லாமல் அவஸ்தைப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள். ஆஸ்துமாவை முற்றிலுமாக குணப்படுத்திவிடுவது என்பது சாத்தியமில்லை. ஆனால், எளிமையான சிகிச்சை முறைகளின் மூலம் கட்டுப்படுத்தி சந்தோஷமாக வாழ முடியும்" என்கிறார் ஆஸ்துமா மற்றும் அலர்ஜி ஸ்பெஷலிஸ்டான டாக்டர் ஸ்ரீதர்.

"இது ஆஸ்துமா நோயால் அவதிப்படுகிறவர்களுக்கு மட்டுமில்லை, பல டாக்டர்களுக்கே தெரிவதில்லை. ஆஸ்துமா என்றவுடனேயே ஸ்டீராய்டு மாத்திரைகளைக் கொடுத்து விடுகிறார்கள். அவை சரிப்படுத்துகிறதோ இல்லையோ, வேண்டாத பக்கவிளைவுகளை ஏற்படுத்தி விடுகின்றன" என்கிறார்.

மே இரண்டாம் தேதி, உலக ஆஸ்துமா தினமாய் கடைப்பிடிக்கப்படுகிறது. இந்த நோய் குறித்த விழிப்புணர்வை மக்களிடையே ஏற்படுத்துவதுதான் இதன் நோக்கம். சென்னையில் கடந்த நான்கு வருடங்களாக, டாக்டர் ஸ்ரீதர் அந்நோய் குறித்த விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தும் விதமாக, நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்து வருகிறார். நான்கு நிகழ்ச்சிகளிலும் சிறப்புச் சொற்பொழிவாளராகப் பங்கேற்றவர் சுகி. சிவம்! "எனக்கும் டாக்டர் ஸ்ரீதருக்கும் என்ன பொருத்தம் தெரியுமா? ஆஸ்துமாவுக்கு அவர், ஆத்மாவுக்கு நான்", என்று சுகி சிவம் குறிப்பிட்டபோது, அரங்கில் பலத்த கைத்தட்டல்.

நாலு பெற்றோர்கள், தம் குழந்தையின் ஆஸ்துமாவோடு போராடிய அனுபவத்தையும், டாக்டர் ஸ்ரீதரிடம் சிகிச்சை பெற்றபின், குணமடைந்து நார்மலாக இருப்பதையும், உணர்ச்சி பூர்வமாகப் பகிர்ந்து கொண்டனர்.

ஆஸ்துமா பற்றி அத்தனை விஷயங்களையும் எடுத்துச் சொல்லி, டாக்டர் ஸ்ரீதர் அளித்த டீ.வி. பேட்டி ஒன்றைப் போட்டுக் காட்டினார்கள். பார்வையாளர்கள் பங்கேற்ற கேள்வி பதில் நிகழ்ச்சியும் நடந்தது.

சுகி. சிவத்தின் கலகலப்பான சொற்பொழிவுக்குத் தலைப்பு, 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்!' இந்தப் பழமொழிக்கு அவர் அளித்த விளக்கம் :

"இன்று அரசியல்வாதிகள், 'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்' என்றவுடன், 'பதவியில் இருக்கிறபோதே 'பணம்' சம்பாதித்துக் கொள்' என்று அர்த்தம் செய்து கொண்டு, சொத்து சேர்ப்பதில் குறியாக இருக்கிறார்கள்.

ஆனால் கிராமப்புறங்களில், அறுவடை முடிந்தவுடன், களத்துமேட்டில், நெல்லை நன்கு காற்று அடிக்கிறபோது தூற்றுவார்கள். நெல்லில் இருக்கும் தூசியும், பதர்களும் காற்றோடு போய்விட, நல்ல நெல்மணிகள் மட்டும் தரையில் சேரும். இது சரியான பொருள்தான் என்றாலும், இன்னும் ஓர் அர்த்தமும் இந்தப் பழமொழிக்கு இருக்கிறது. தூற்றிக் கொள் என்றால், 'திருத்திக் கொள்' என்று பொருள் உண்டு. ஆக காற்றுள்ளபோதே தூற்றிக் கொள் என்றால், உன் மூச்சுக் காற்று உள்ளபோதே, அதாவது இந்தப் பிறவியிலேயே, நீ உன்னுடைய தவறுகளையெல்லாம் திருத்திக் கொள் என்பதுதான் அது."

- எஸ். சந்திரமௌலி

படங்கள் : யோகா



கூனுக்காக சுமார் முப்பது டிகிரி முதுகை வளைத்துக் கொள்ளுதல், வளைந்த கால்களோடு வாத்து போல் நடத்தல், போலியோவால் பாதிக்கப்பட்டது போல கைகளை வைத்துக் கொள்ளுதல், தெத்துப் பல்லோடு பேசுதல், சிரித்தல் ஆகிய நான்கு உடல் மொழிகளை ஒரே நேரத்தில் ஒருங்கிணைத்து நடித்து, கூனன் சின்னா கதாபாத்திரமாகவே மாறிவிடுகிறார் சூர்யா. அதே வேளையில் சின்னா பாத்திரத்திலிருந்து முரட்டுக் கல்லூரி மாணவன் கார்த்திக்கை தோற்றம், நடிப்பு இரண்டிலுமே அற்புதமாக வேறுபடுத்திக் காட்டியிருக்கிறார். இளவயதில் இத்தனை ஈடுபாடு காட்டும் சூர்யாவை, வளரும் சூப்பர் ஸ்டார் என்று பாராட்டினால் தகும்.

பொதுவாக இரட்டை வேடப் படங்களில் ஒருவர் இறந்து விட்டால், மற்றொருவர் அந்த இடத்தை நிரப்புவார். நல்ல வேளையாக அது போன்ற மெலோடிராமா திருப்பம் எதுவுமில்லாத கதை. ஆனால் எதிர்பாராத திருப்பங்கள் நிறைந்த கதை. பாடல்களுக்கு இயல்பான சூழ்நிலைகள் அமையாதது குறை.



கூனன் சூர்யாவின் தெத்துப் பல், பரட்டைத் தலை, அவரது கூன் என, அத்தனையும் தத்ரூபம். ஆதரவில்லாத, ஒரு பார்வையற்ற பெண் தன்னைத் தானே அலங்கரித்துக் கொள்ள முடியாது என்பதை உணர்த்தும் விதமாக, மேக்-அப் இல்லாத ஜோதிகாவின் தோற்றம். கலக்கி இருக்கிறார் ஒப்பனைக் கலைஞர் புஜ்ஜிபாபு.

விவேக்கின் சரவெடி நகைச்சுவைக்குக் கிடைக்கும் வரவேற்பைக் காட்டிலும், கூனன் சூர்யாவுக்கு அதிகமாகக் கிடைக்கிறது. அவரைக் கண்ட மாத்திரத்தில் தியேட்டர் மொத்தமும் சிரிக்கிறது. விவேக்கின் நகைச்சுவையில் தனி நபர் தாக்குதல் மெல்ல எட்டிப்பார்க்கத் தொடங்கியிருக்கிறது.

இம்முறை 'ஓ போடு' போல கவர்ச்சி நடனம் எதுவுமில்லாமல் முழுப் படத்தை எடுத்திருக்கிறது ஏவி.எம். நிறுவனம். அதற்காகவே ஸ்பெஷலாகப் பாராட்ட வேண்டும்.

# பேரழகன்

*சின்னா அனுபவம் பற்றி சூர்யா என்ன சொல்கிறார்?*

சென்னையில் ஒரு தனியார் மருத்துவமனையில், சில கூன் முதுகு மனிதர்களை கவனித்ததில் கிடைத்த இன்ஸ்பிரேஷன் உதவியாக இருந்தது. பிறகு வீட்டில் பதினைந்து நாள் பயிற்சி. முதல் இரு தினங்கள் படப்பிடிப்பில் எல்லாவற்றையும் ஒரே நேரத்தில் செய்ய சிரமப்பட்டேன். மூன்றாவது நாள் பழகிவிட்டது. யோகா உடற்பயிற்சி மூலம் உடலை நெகிழ்வாக வைத்துக் கொண்டு நடித்தது, சின்னா பாத்திரத்துக்குக் கைகொடுத்தது.



*இது பற்றி இயக்குனர் சசி சங்கர் என்ன சொல்கிறார்?*

எனது நண்பர் பென்னி எழுதி, கேரளத்தில் வெள்ளி விழா கண்ட மேடை நாடகம் 'விகலாங்கன் வருஷம்.' அதன் கதைக் களத்தை மாற்றித் திரைக்கதை எழுதினேன். எல்லாப் பாடல்களுக்கும் இயல்பான சூழ்நிலைகள் அமைவது கடினம். தவிர, படத்தை விரைந்து முடிக்க வேண்டிய அவசரம்.

*புஜ்ஜிபாபு சொல்வது?*

கூன் பாத்திரத்திற்காக மட்டும் ஐந்து லட்ச ரூபாய்க்கு சிறப்பு மேக் - அப் சாதனங்களை வெளிநாட்டிலிருந்து தருவித்தோம். ஜோதிகாவுக்கு மேக்-அப் செலவே கிடையாது.



*சரிதானா விவேக்?*

இதுவரை தனி நபர்களைப் பாராட்டும் விதமாகத்தான் எனது நகைச்சுவை இருந்து வந்திருக்கிறது. மெல்லிய கிண்டல் இழையோடுவதால் உங்களுக்கு அது தாக்குதலாகத் தெரியலாம்.

*தயாரிப்பாளர் எம். சரவணன் என்ன சொல்கிறார்?*

குடும்பத்தில் ஒட்டுமொத்தமாக எல்லோரும் படத்திற்கு வரவேண்டும் என்று விரும்பியே இது போன்ற பாடலைத் தவிர்த்தோம். நாங்கள் எதிர்பார்த்தது போலவே, கூனன் சின்னாவை, குழந்தைகளுக்கும், சிறுவர்களுக்கும் ரொம்பப் பிடித்துப் போய்விட்டது.

— விஷ்வல்தாசன்

"முறைகேடான ஜனநாயகம் எப்படி மோசமானதோ, எப்படி நேர்மையற்ற தலைமை வெறும் பதவி சார்ந்ததாக இருக்கிறதோ, அப்படியே கோட்பாடுகள் அற்ற பத்திரிகைத் துறையும் அபாயகரமானது. செய்திகளையும், கருத்துகளையும் வெறும் வியாபாரப் பொருள்களாகவே அது மாற்றிவிடும்."

சென்னை, ஏஷியன் காலேஜ் அஃப் ஜர்னலிஸம் பட்டமளிப்பு விழாவில் தலைமையுரை ஆற்றிய அருணா ராய், குரலை உயர்த்தாமல்தான் பேசினார். ஆனால் அவர் பேசியவை ஆணி அறைந்தாற்போல் மனத்தில் பதிந்தன. உத்வேகம் அளித்தன.



* அருணா ராய்



அரசுப் பணிகள் பற்றி மக்கள்

# மக்ஸேஸே விருது? டிரக் யாத்திரை சென்ற தமிழ்ப் போராளி!

அறிய உதவுகிற 'ரைட் டு இன்ஃபர்மேஷன்' என்ற உரிமையைப் பெறப் போராடி, ராஜஸ்தான் மாநிலத்தில் விழிப்புணர்வை உண்டாக்கியவர் அருணா ராய். தமிழர்! முன்னாள் ஐ.ஏ.எஸ். அதிகாரி! தற்போது வசிப்பது ராஜஸ்தானிலுள்ள தேவ்துங்ரி கிராமத்தில். வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவரான இவர் சமூகப் பணி செய்து வருகிறார். இவரது கணவர் சஞ்சித் பஸ்கர் ராயும் சமூகப் பணியாளர்தான்.

சமீபத்தில், தேர்தல் அறிவிப்பு வெளியானவுடன், ராஜஸ்தானில் வேட்பாளர்களின் குற்றப் பின்னணிகளையும், சொத்து விவரங்களையும் மக்கள் அறிய வேண்டும் என்பதற்காக, 'எலெக்ஷன் வாச்' என்ற வெளியீட்டைக் கொண்டு வந்தவர்.

அவருடைய பேட்டியிலிருந்து...

**ஏன் ஐ.ஏ.எஸ். பதவியை உதற[illegible]னீர்கள்?**

எனக்கு அந்த உத்தியோகம் பிடிக்[illegible] வில்லை.

**அதிகார வர்க்கத்துக்கு எதிராக[illegible] போராடுகிறீர்களே? உங்களுக்கு அதி[illegible]காரிகளிடமிருந்து ஆதரவு கிடை[illegible]கிறதா?**

எப்படிக் கிடைக்க முடியும்? ஜன[illegible]நாயக ஆட்சி நடக்கும் ஒரு நாட்டில் மக்கள் அறிய வேண்டிய உரிமை[illegible] மறுப்பது நியாயமல்ல. ஆனால் அதிகா[illegible] வர்க்கம், புரட்சிகர மாறுதல்களை ஏற்[illegible] உருவாக்கப்பட்டதல்ல. அதை மாற்ற[illegible]தான் போராட வேண்டியிருக்கிறது!

**எது உங்கள் வாழ்க்கையின் திருப்[illegible] முனையாக அமைந்தது?**

எத்தனையோ நிகழ்ச்சிகள்! எமெ[illegible] ஜென்சியைப் போல மோசமா[illegible]

நிலைமை உண்டா? அதற்குப் பிறகும் பல நிகழ்வுகள். சமீபத்தில் குஜராத்...

**உங்கள் உழைப்போர் - விவசாயிகள் சக்தி இயக்கம், அரசியல் கட்சி சார்பு உள்ளதா?**

இது ஒரு சமுதாய இயக்கம். மக்கள் நலனுக்காக மட்டுமே, அரசியல் கட்சி சாராத அமைப்புகளில் ஒன்று.

**எதற்கு 'ட்ரக்-யாத்ரா' நடத்தினீர்கள்?**

ட்ரக்தான் ராஜஸ்தானில் சாதாரண மக்களின் போக்குவரத்துச் சாதனம். இதன் மூலம் சுமார் அறுநூறு கிராமங்களில் உள்ள மக்களைச் சந்தித்து, அவர்கள் குறைகளை அறிய முடிந்தது.

**இந்தச் சங்கத்தை எப்போது ஆரம்பித்தீர்கள்?**

1990ல். கிராம மக்களிடம் செய்திகளைக் கொண்டு செல்வதில் கெட்டிக்காரரான சங்கர் சிங், மற்றும் அமெரிக்காவில் படித்துக் கொண்டிருந்த நிகில் டே என்ற இளைஞருடன் தொடங்கினோம். படிப்பைப் பாதியில் விட்டுவிட்டு, எங்களுடன் வந்து சேர்ந்து கொண்டார் நிகில். இந்த அமைப்பின் நோக்கமே, அடி மட்டத்தில் உள்ள மக்களுடன் இணைந்து உழைப்பதுதான்.

இந்த அமைப்பின் பெரிய வெற்றியாகக் கருதப்படுவது, நிலமில்லாதவர்களுக்கு நில வினியோகமும்; குறைந்த பட்சக் கூலியும் கிடைக்கச் செய்ததுதான். கிராமங்களைப் பொறுத்தவரை, இவை இரண்டும் மிக முக்கியமானவை. ஏனென்றால், உழைப்புக்குத் தகுந்த ஊதியம் கொடுக்கப்படாமல் இவர்கள் ஏமாற்றப்பட்டு வந்தார்கள். வேலை செய்தாலும், பதிவேடுகளில் இவர்கள் பெயரே இருக்காது! அந்தப் பதிவேட்டைக் காட்டச் சொல்லிக் கேட்டால், 'அரசு ரகசியக் காப்புச் சட்டம் (1923) படி, அரசு ஆவணங்களைக் காட்டக் கூடாது' என்று மறுத்து வந்தார்கள். இதனால் லட்சக் கணக்கான ரூபாய்களை உழைப்பாளர்கள் இழந்தனர். கையெழுத்துப் போடத் தெரிந்த பணியாளரின் பெயருக்கு எதிரே, கைநாட்டுப் போட்டுவிட்டு, ரூபாயைச் சுருட்டிக் கொண்டு விடுவார்கள்!

- சாருகேசி

தேர்தல் பிரசாரமெல்லாம் முடிந்து ரிலாக்ஸ்ட்டாக இருந்தார் வாஜ்பாயி.

"வாடாப்பா வா, என் மூடைக் கெடுக்க வர்றியா?" என்றார்.

"நானா கெடுக்கிறேன்? மூன்றாவது கட்ட தேர்தலுக்குப் பிறகு, தேசிய ஜன நாயகக் கூட்டணிக்கு மெஜாரிட்டி கிடைக்காதுன்னு அபிப்பிராய வாக் கெடுப்பு சொல்லுதே" என்றேன்.

"இன்னும் ரெண்டு மூணு நாள் பொறு, எல்லா Exit வாக் கெடுப்பும் Fix it வாக்கெடுப் புன்னு புரிஞ்சுக் குவே" என்றார் பிரதமர்.

"அதை ஏன் இவ்வளவு வருத்த மான குரலில் சொல் றீங்க?"

"பின்னே, இந்த வய சிலே பிரதமராகி எத் தனை பிரச்னைகளை சமாளிக்கணும்...! நினைச்சாலே கவலையாத்தான் இருக்கு!"

"நீங்க ரொம்பப் பாவமுங்க; தேசிய ஜனநாயகக் கூட்டணி ஜெயிச்சாலும் பிரச்னை, தோற்றாலும் பிரச்னை!"

அவருடைய பிரும்மாண்டமான ஏக் கப் பெருமூச்சே என்னை ஆகாசத்துக்கு உயர்த்தி, போயஸ் தோட்டத்தில் கொண்டு வந்து இறக்கியது!

★★★

"ஜெ.ன்னா ஜெ.தான்! நிரூபிச்சுக் காட்டிட்டீங்களே!" என்றேன்.

"எதைச் சொல்றே?" என்று கேட்டார்.

"ரஜினியைப் பிரதமர் விமான நிலை யத்தில் சந்திக்கிறார் என்று தெரிஞ்சதும், வாஜ்பாயியை வரவேற்க ஏர்போர்ட்டுக் குப் போகாமலேயே இருந்துட்டீங்களே!"

"நீ வழக்கம்போல சிண்டுமுடியப் பார்க்கறே. அங்கே நான் போகாததற்கு ரஜினி காரணமில்லை. வேறு தனிப்பட்ட காரணங்கள் உண்டு!"

"ரொம்பச் சரி, ஆனா நாளைக்கு சட்டமன்றத்தில் யாராவது கேள்வி எழுப் பினா, 'எனக்கு உரிய முக்கியத்துவம் தரா மல் ஜக்கு பாயைப் பிரதமர் சந்திச்சது, தமிழகத்தை, முதல்வர் பதவியை, அவ மதித்ததாக ஆகிறது; அதனால்தான் நான் விமான நிலையம் போகலை'ன்னு சொல்லி வைக்காதீங்க. அப்புறம் 'சொந் தக் காரணம்' என்ற சால்ஜாப்பு எடு படாமல் போயிடும்!"

ஜெ. கோபத்துடன் என்னை முழித்துப் பார்த்து, "செக்யூரிட்டி..." என்று உரக்க அழைத்தார்.

"செக்யூரிட்டி என்னை வெளியேற்றி விடலாம். ஆனால் பிரதமர் உங்களைத் திருப்பூரில் காலை வாரி விட்டதற்கு அவரை நீங்கள் என்ன செய்ய முடியும்?"

"எதைச் சொல்றே...?"

"இது நாடாளுமன்றத் தேர்தல்;

# செய்திகள், திரிப்பது

எனவே, மாநிலப் பிரச்னைகளை மறந்துட்டு வோட்டுப் போடுங் க'ன்னு சொன்னாரே, அதுக்கு என்ன அர்த்தம்? உங்க ஆட்சியில் நிறைய பிரச்னைகள் இருப்பதாகப் பிரதமரே ஒப் புக் கொள்வதாகத்தானே ஆகிறது!" என்று கூறிய கையோடு போல்வால்ட் செய்து, ஒரே தாவலில் போயஸ் தோட்டச் சுற்றுச் சுவரைத் தாண்டிக் குதித்துத் தப்பினேன்!

★★★

அங்கிருந்து பொடி நடையாக கோபாலபுரம் போனால், கலைஞர் மும்முரமாக எழுதிக் கொண்டிருந்தார்.

கதவை இலேசாகத் திறந்து உள்ளே எட்டிப் பார்த்தேன், "உடன்பிறப்புக்குக் கடிதமா? சிறுகதையா? கவிதையா?..."

"தேர்தல் பிரசாரப் பயணம் முடிஞ் சுது; இனி இலக்கியப் பயணம்தான்" என்றார். "அதுக்கு இப்ப நிறைய அவ காசம் இருக்கும்..."

"இப்ப அப்படித்தான் தோன்றும்; நாளைக்கு டில்லியில் அமைச்சரவை அமைப்பதில் எத்தனைக் குழப்பங்களோ.. தீர்த்து வைக்க உங்களைத்தானே கூப் பிடுவாங்க..?"

"அழைத்தால் போக வேண்டியது தான். கடமையைச் செய்ய என்றைக்குமே பின் வாங்கியதில்லை. எடுத்த முயற்சி யெல்லாம் விழலுக்கு இரைத்த நீராகி விட அனுமதிப்பேனா என்ன?"

"அது சரி, நீங்க தேசிய ஜனநாயகக் கூட்டணியிலிருந்து வெளியேறியதற்கு சரியான ஒரு காரணம் கூடச் சொல்லலை என்று வாஜ்பாய் சென்னைக்கு வந்து பேசியிருக்கிறாரே...?"

"முன்னே ஒரு பிரதமர் 'நான் நாளிதழ்களே படிக்கிறதில்லை' என்று பெருமையாகக் கூறிக் கொண்டார்..."

"ஆமாம்..."

'அவர் பெயரைச் சொல்ல வேண்டாம்.'

"சரி."

# சம்பியன்





"இப்ப வாஜ்பாய், தாம் நாளிதழ்களைப் படிப்பதே இல்லை என்று தம் வாயாலேயே நிரூபிக்கிறார்!"

"அதானே! பிரிஞ்சு வந்ததற்கான காரணங்களை..."

"அழுத்தமா, ஆணித்தரமா நானும் சொல்லியிருக்கேன்; வை.கோ.வும் சொல்லியிருக்கார்; ராமதாஸும்..."

"கொஞ்சம் லேட்டா சொல்லியிருக்கார்!"

"முதல் காரணம், பொடாவைத் திரும்பப் பெற மறுத்தது. அது துஷ்பிரயோகமாவதையும் தடுக்க முடியாமல் தவித்தது; இரண்டாவது, இந்துமத அடிப்படைவாத சக்திகளுக்கு ஆதரவு பா.ஜ.க. ஆட்சியில் அதிகரித்தது. இந்த விஷயங்களில் பா.ஜ.க., கூட்டணி தர்மத்தைப் புறக்கணித்தது."

"ஓ.கே.!" என்று ஆமோதித்துவிட்டு, ஃபிளைட் பிடித்து, முலாயம் முன்பாக நின்றேன்.

★ ★ ★

"மூன்றாவது அணி உருவாகுது, உருவாகுது. நல்ல காலம் பொறக்குது..." என்றார்.

"யாருக்கு? உங்களுக்கா? நாட்டுக்கா?"

"எனக்கு, நாட்டுக்கு, பிரதமர் பதவிக்கு..."

"தெரியாமத்தான் கேட்கிறேன், யாருங்க பிரதமர்?"

"உ.பி. மாநிலத்தைச் சேர்ந்தவர். இந்த மாநிலத்தில் தேர்தலில் நின்று வென்றவர்."

"அப்ப, ஷரத்பவாருக்கு பவர் கிடைக்காதுன்னு சொல்லுங்க..."

"அந்தாளுக்கு அப்படி ஒரு கனவு இருக்கா...?"

"உங்களுக்கு இருந்தா, அவருக்கு மட்டும் இருக்கக் கூடாதா?"

"பேஷா இருக்கட்டுமே, ஆனா அந்தக் கனவு நிறைவேறாது!"

"வாஜ்பாயி, சோனியா, நீங்க, சந்திரசேகர் எல்லாரும் உ.பி.தான்... யாருங்க பிரதமர்?"

"ஓ! ஒன்னரை, டூ வர, டக்கர, டன் போட்டுப் பாரு!"

"யாவல், காவல், மஸ்ட் பி டன்; கன்னன், குன்னன், டுவெண்டி ஒன்..." என்று மனசுக்குள் நூறு பேரையும் மாற்றி மாற்றி தொட்டுக் கூறிக் கொண்டே சென்னைக்குத் திரும்பினேன்.

பின்னோடு தேர்தல் ரிஸல்ட்டும் பல்வேறு மீடியாக்கள் மூலம் வந்து சேர்ந்தது!



• ஜூனியர் ஹாக்கி அணி

# அங்கே காயம்! இங்கே மருந்து!

பாகிஸ்தான் அணியை அந்த மண்ணிலேயே வெற்றி காண்பதென்பது சும்மாவா? பாராட்ட வேண்டாமா நமது அணியை?

"நிறையப் பாராட்டியாச்சே" என்று திகைப்பவர்கள், கிரிக்கெட்டுக்கு வெளியிலும் கொஞ்சம் கால் (மனம்) வைக்கலாம். இங்கு நாம் குறிப்பிடுவது, ஜூனியர் ஹாக்கி அணியை. ஆசிய ஜூனியர் ஹாக்கிப் போட்டியில் தான் நம் அணி அந்தச் சாதனையை நிகழ்த்தியிருக்கிறது. கராச்சியில் நடைபெற்றது இந்தப் போட்டி. ஐந்து வருடங்களுக்குப் பிறகு, பாக். மண்ணில் மோதின இந்த இரு அணிகளும்.

சொல்லப்போனால், இறுதிச் சுற்றில் யார் வெற்றி பெறுவார்கள் என்பது பற்றிக் கவலைப்பட்டிருக்கவே தேவையில்லை. காரணம், இந்த இரு அணிகளுமே தங்கள் இலக்கை அடைந்துவிட்டன.

அதாவது, அடுத்த ஆண்டு நெதர்லாந்தில் நடைபெற இருக்கிறது, உலக ஜூனியர் ஹாக்கி கோப்பைப் பந்தயம். அதில் இடம் பெறுவது ஆசிய நாட்டின் எந்த அணிகள் என்பதைத் தீர்மானம் செய்யத்தான், ஆசிய ஜூனியர் ஹாக்கிப் போட்டிகள் நடைபெற்றன. இதில் முதல் மூன்று இடங்களைப் பெற்ற நாடுகள், உலகக் கோப்பைப் பந்தயத்தில் பங்கு பெறும் தகுதியைப் பெறுகின்றன.

ஆசியக் கோப்பைப் பந்தயத்தில் மொத்தம் பதினாறு கோல்கள் போட்டு, அசத்திய சந்தீப் சிங்கோடு அட்ரியன் டிசௌஸா, துஷார் காண்டேகர், வி.எஸ். வினய் ஆகியோரும் குறிப்பிடப்பட வேண்டியவர்கள்.

இந்திய அணியின் பயிற்சியாளர் ஹரேந்திரசிங், "இந்த அணி பாகிஸ்தானுக்குப் போனதே ஜெயிக்கத்தான்" என்கிறார். நியாயமான உற்சாகம்தான். ஆனால் கூடவே "கார்கில் போரில் இறந்த நம் வீரர்களுக்கான அஞ்சலிதான் இந்த வெற்றி" என்றும் கூறியது, இப்போதைய சூழலில் தேவையில்லாத ஒன்று.

தன்ராஜ் பிள்ளை, விமான நிலையத்துக்கே சென்று ஜூனியர்களை வரவேற்றது ஆரோக்கியமான போக்குக்கு ஓர் உதாரணம். இறுதிச் சுற்றின்போது, செல்ஃபோனிலேயே ஹரேந்திர சிங்கைத் தொடர்பு கொண்டு பல ஆலோசனைகளை அளித்துக் கொண்டிருந்தாராம் தன்ராஜ் பிள்ளை.

சமீபத்தில் ஆஸ்திரேலியாவில் நமது இந்திய சீனியர் ஹாக்கி அணி பட்ட காயங்களுக்கு, ஜூனியர் ஹாக்கி அணியினரின் வெற்றி மருந்து போட்டிருக்கிறது. இந்திய ஹாக்கியின் வருங்காலம் குறித்து நம்பிக்கைக் கீற்று புலப்படுகிறது.

- ஜி.எஸ்.எஸ்

"ராஜாங்கற பேர் உள்ள ஐயாவுக்கு ஒரு சீட்டு எடுடா ராஜா" என்று படத்தில் உள்ள கிளிகளிடம் சொன்னால் 'போடா மடையா!' என்று கத்தும். ஏனென்றால் பழக்கப் படுத்தவில்லை. சாதாரண கிளி ஜோதிடக்காரர்கள், இந்தக் கிளிகளை வாங்கி, பழக்கப்படுத்தவும் முடியாது.

காரணம் - ஒவ்வொரு கிளிகளின் விலையும் ஐம்பதாயிரத்திற்கும் மேல்.

இந்த மாதிரியான அயல்நாட்டுக் கிளிகளை வளர்ப்பதில் ஆர்வம் காட்டி வருகிறார் டாக்டர் லட்சுமி காந்தன். இவர் மிகவும் பிசியான லாப்ரோஸ்கோப்பி மற்றும் ஜெனரல் சர்ஜன். நெசப்பாக் கத்தில் தனியாக ஆஸ்பிடல் ஒன்றும் நடத்தி வருகிறார்.

இவரிடம் சாதாரண பச்சைக் கிளி முதல், ஆஸ்திரேலியா, அமேஸான், ஆப்பிரிக்கா என்று பல நாடுகளைச் சேர்ந்தக் கிளிகள் இருக்கின்றன. டாக்டரிடமிருந்து கிளிகளைப் பற்றித் தெரிந்து கொண்ட சில விபரங்கள் :




உடல் பாகம் தங்க நிறமும், நீல நிறமும் கலந்ததாகவும், கழுத்துப் பாகம் வெள்ளையாகவும் இருக்கும் 'மக்காவ்' (Macaw) என்ற கிளி, சுமார் நூறு வருடங்கள் வாழும்.

'காக்டூ' (Cocktoo) என்று சொல்லப்படும் வெள்ளை நிறக் கிளிகள், சுமார் எழுபது வருடங்கள் வாழும்.

கிளியின் இயற்கையான நிறம் பச்சை. சிறகுகளின் இயற்கையான நிறம் மாற மாற, விலையும் அதிகம். சாதாரண பச்சைக் கிளி நாநூறு ரூபாய் என்றால், நீலச் சிறகுகளை உடைய கிளி எண்ணூறு ரூபாய். கறுப்புச் சிறகுகளை உடைய கிளி இருநூற்றி ஐம்பது ரூபாய். வெள்ளைச் சிறகை உடைய கிளி எட்டாயிரம் ரூபாய்.

கிளிகளுக்குச் சாதாரண ஆகாரம் நெல், சூரிய காந்தி விதை. இனப் பெருக்கம் செய்யும் சமயத்தில் பால், பச்சைப் பயிறு, முளை விட்ட கடலை, சோளம் தருவார்கள். பெரிய அயல் நாட்டுப் பறவைகளுக்கு மத்தியானம் பால் சாதம், கொத்தமல்லி இலை, அதனுடன் பாதாம், பிஸ்தாவும் தருவார்கள். (அதிர்ஷ்டக்காரப் பறவைகள்) விட்டமின் வேண்டும் என்பதற்காக சூரிய காந்தி விதைகளை, காட்லீவர் ஆயிலில் புரட்டித் தருவது வழக்கம்.

வீட்டில் இது போன்ற பறவைகளை வளர்ப்பதால், "தினசரி ஏற்படும் டென்ஷன் நீங்குகிறது. மன அமைதி கிடைக்கிறது. குழந்தைகளுக்கும் பொறுப்புணர்ச்சி ஏற்படும். பறவைகளை நேசிக்க ஆரம்பித்து விடுவார்கள். டீ.வி பார்ப்பதைக் குறைத்துக் கொள்வார்கள்" என்கிறார்.

பறவைகளைப் பற்றிய எல்லா சந்தேகங்களுக்கும் டாக்டர் லட்சுமி காந்தனுக்கு குரு, ஆனந்தவிகடன் ஆசிரியர் பாலசுப்ரமணியம்.

- கமலநாதன்



# ஜனகணமன

'**கா**தலே எங்கள் தேசிய கீதம்' படத்தின் கதாநாயகி வர்ஷினிக்கு ஒரு டெஸ்ட். 'ஜனகணமன' தப்பில்லாமல், பாட வேண்டும். முடியுமா? கேட்டதும், கொதித்துப் போனார். "நான் சென்னை விவேகானந்தா வித்யாஸ்ரம் மாணவி" என்று சொல்லிவிட்டு, நூறு பேருக்குமேல் குழுமியிருந்த படப்பிடிப்புத் தளத்தில் கூச்சப்படாமல் உச்ச ஸ்தாயியில் பாட, இயக்குனர் உட்பட எல்லோரும் அட்டென்ஷனில் நின்றார்கள். நல்லவேளையாக அன்று கடைசிநாள் படப்பிடிப்பு. நமக்கோ செவிகளில் சிலிர்ப்பு.

"காதலை கௌரவிக்கிற மாதிரி தேசிய கீதம் பாணியில் படத்தில் ஏதாவது பாடல்..." என்று கேள்வியை முடிப்பதற்குள் "காதலே எங்களின் தேசிய கீதமே! கண்களே எங்களின் தேசியச் சின்னமே" என்று 'கோலங்கள்' தேவயானிபோல கைகளை உயர்த்தி கண்களை மூடியபடி உணர்ச்சிகரமாகப் பாட ஆரம்பித்தார். குரல் இனிமையாகத்தான் இருந்தது. ஆனால் நமது அடுத்த கேள்விக்கும் பாடியே பதில் சொன்னால் என்னாவது, என்ற பயத்தில் 'எஸ்கேப்'பானோம்.

இனி எந்தக் கதாநாயகியிடமும் பாடத் தெரியுமா என்று கேட்டுவிடக் கூடாது.

- ஜெய்





மே, 16-2004

# மினி கல்கி

கௌரவ ஆலோசகர்கள்...

ஓவியர் மருது

டாக்டர் கே.ஸ்ரீதர்

டாக்டர் எஸ்.அசோக்

டாக்டர் எஸ்.மகாதேவன்

சவேரா ஹோட்டலின் நீனா ரெட்டி

வழக்கறிஞர் கே.சுமதி

டாக்டர் இரா.அன்புமணி

பேராசிரியர் கு.ஞானசம்பந்தம்

டாக்டர் தமிழிசை சௌந்தரராஜன்



# துளி துளி உயிர்த் துளி!

நீரியல் நிபுணர்

டாக்டர் ப.ரவிச்சந்திரன்



**எதிர்பாராத மழை தமிழ்நாட்டு மண்ணையும் மனங்களையும் குளிர்வித்தாலும் தண்ணீர்ப் பஞ்சத்துக்குத் தீர்வு பிறந்துவிடாது. உயிர்த் துளியான எச் டூ ஓ பற்றிய விழிப்புணர்வே இப்பிரச்னைக்கு முதல் தீர்வு என்கிறார் நீரியல் நிபுணர் டாக்டர் ப. ரவிச்சந்திரன். இதோ அவர் கண்ணோட்டம்.**

பாலைவனம். நீண்ட பயணத்தில் ஈடுபட்டிருந்தது ஒட்டகம். பாதி வழியில் தீவிர தாகம். அதிர்ஷ்டவசமாக அருகில் தென்பட்ட தடாகத்திற்கு ஆர்வமாய் நீர் அருந்தச் சென்றது. நெக்குருகியபடி நீரை உறிஞ்சிக் கொண்டிருந்தபோது, தடாகத்தில் ஓடிக் கொண்டிருந்த மீன் சொன்னது,

"உன்னை நினைத்தால் பாவமாக இருக்கிறது. தண்ணீரை ஒரேயடியாகக் குடித்து, சேமித்து வைத்துக் கொள்ள வேண்டிய கட்டாயம்."

ஒட்டகம் சொன்னது,

"எந்த நேரத்தில், யார் விழுங்குவார்களோ என்ற அச்சத்தோடு வாழும் உனது பரிதாப வாழ்வைக் காட்டிலும், பாலைவனப் பயணம் மேல்"

அதற்குள் அந்தப் பக்கமாய் ஒரு முதலை வாயைப் பிளந்தபடி விரைந்து வர, ஓட்டம் பிடித்தது மீன்.

இந்தக் கதைக்கும் தமிழகத்தின் தண்ணீர் தாகத்திற்கும் நிறைய ஒற்றுமை. உலக அழகிகளின் நாட்டில் இந்த ஒட்டகம் போல நீரைத் தேடி அலைகிறார்கள் பெண்கள். அனுமதிக்கப்பட்ட அளவைக் காட்டிலும், அதிக அளவு பூச்சிக் கொல்லி மருந்துகள் நிறைந்த, அடைக்கப்பட்ட குடிநீரை (?) வாங்கி அருந்துகிறார்கள், மேல்தட்டு மக்கள். ஏன் இந்த நிலை?



டாக்டர் ப. ரவிச்சந்திரன்



பூமிப் பந்தில் சூழ்ந்திருக்கும் தண்ணீரில் தொண்ணூற்று ஏழு சதவிகிதம் கடல் நீர். எஞ்சிய மூன்று சதவிகிதம் மட்டுமே நன்னீர். இந்த நன்னீரிலும் மூன்றில் இரண்டு பங்கு, ஐஸ் கட்டிகளாக உறைந்து கிடக்கிறது. எஞ்சிய ஒரு பங்கு நீரை, கொஞ்சம் கொஞ்சமாய்த் தீர்த்துக் கொண்டே வந்த மனித இனம், தண்ணீர் பற்றிய விழிப்புணர்வு பெறாமல், இன்று தாகத்தால் தவிக்கிறது. நதிக்கரையில் குடியேறி தனது நாகரிகத்தை வளர்த்தெடுக்கக் காரணமாய் இருந்த தண்ணீரை, இன்று மனித நாகரிகமே நஞ்சாக்குகிறது. 'நீரின்றி அமையாது உலகம்' என்று தரணி முழுமைக்கும் சொன்ன தமிழகம், இன்று 'நீர் மேலாண்மையில் பின் தங்கி இருக்கிறது. நீரின் தன்மைகள் பற்றி அறியாமல் எப்படி நீர் மேலாண்மையில் சாதிக்க முடியும்?





## என்ன இருக்கிறது தண்ணீரில்?



ஒரு லிட்டர் தண்ணீரில் 88.9 சதவிகிதம் ஹைட்ரஜனும், 11.1 சதவிகிதம் ஆக்ஸிஜனும் கலந்திருக்கின்றன. இதை உணர்த்தும் விதமாக, தண்ணீரின் குறியீடான $H_2O$வில் H மற்றும் O ஆகிய ஆங்கில எழுத்துக்கள் ஜம்மென்று இடம் பிடித்துக் கொண்டிருப்பதைப் பாருங்கள்.

தண்ணீரில் இருக்கும் உப்பு மற்றும் தாதுக்களின் (சால்ட் மற்றும் மினரல்ஸ்) அளவை வைத்தே, மென்மையான நீர், கடின நீர் என்று அடையாளம் காண்கிறோம்.

நிலத்தடிநீர், நில மட்ட நீர் இரண்டிலுமே கால்சியம், சோடியம், மெக்னீசியம், மேங்கனீஸ் போன்ற உப்புக்களும், ஜிங்க், அயர்ன்,

மினி கல்கி



செலினியம், புளோரைடு போன்ற தாதுக்களும் காணப்படுகின்றன. தாவரம் மற்றும் கழிவுகளிலிருந்து வெளிவரும் மூன்று சதவிகித எண்ணெய்ப் பொருட்கள், தண்ணீரில் ஒட்டிக் கொள்கின்றன. தண்ணீரின் தரத்தை அறிய, மேற்கண்ட உப்புக்கள், தாதுக்களை வைத்தே TDS (Total Dissolved Solids) என்ற அளவுமுறை பின்பற்றப் படுகிறது. குடிநீராகப் பயன்படுத்தத் தகுந்த நல்ல நீர் எனில் (ஐடியல் வாட்டர்), ஒரு லிட்டர் தண்ணீரில் டிடிஎஸ். அளவானது, அறுபதுக்குக் கீழே இருக்க வேண்டும். இருநூறை எட்டிவிட்டால் உப்புத்தன்மையுள்ள நீர். டிடிஎஸ். ஐந்நூறுக்கு மேல் இருந்தால் பயன்படுத்தத் தகுதியற்ற உப்பு நீர். ஆனால் தமிழக மாசு கட்டுப்பாட்டு வாரிய அளவுப்படி, ஒரு லிட்டர் தண்ணீரில் டிடிஎஸ். ஆயிரத்து இருநூற்று பத்து மில்லிகிராம் வரை இருக்கலாம். உலக சுகாதார நிறுவனத்தின் அனுமதிக்கப்பட்ட அளவு ஆயிரம் மில்லி கிராம். தூய்மையான தண்ணீருக்கு நிறம் கிடையாது. சுவையோ, மணமோ கூடக் கிடையாது. தாதுக்கள், தாவரங்கள், கழிவுகள் இவற்றால் தண்ணீர் பல்வேறு நிறங்களைப் பெற வேண்டிய கட்டாயம்.

சென்னையில் ஒரு தி(க)ண்ணீர் காட்சி



நிலமட்ட நீரில் பல்வேறு நோய்களை உண்டு பண்ணும் பாக்டீரியாக்களும், கிருமிகளும், உயிர்வாழ்கின்றன. குறிப்பாக போலியோ, மஞ்சள் காமாலை, டைபாய்டு, காலரா, பூஞ்சைக்காளான், புரோட்டோ சோவா, கொக்கிப் புழு, நாடாப்புழு, எலியின் சிறுநீர் மூலம் தண்ணீரில் கலந்து தொற்று ஏற்படுத்தும் லேப்டோஸ்பைரோஸிஸ் மற்றும் தோல் நோய்கள், தண்ணீர் மூலம் விரைந்து பரவக் கூடியவை. தரமற்ற தண்ணீரில் உயிரினப் பெருக்கம் செய்யும் கொசுக் கள் மூலமே மலேரியா பரவுகிறது.

கிருமிகளும் தொழிற்சாலைக் கழிவு களும் அரசாட்சி செய்யும் தண்ணீரை அருந்துவதன் மூலம், ஆண்டுக்கு ஐம்பது லட்சம் பேர் உலகம் முழுவதும் இறந்து போகிறார்கள். (இதில் குழந்தைகளின் எண்ணிக்கையே அதிகம்) இது போர் மற்றும் தீவிரவாதத் தாக்குதல் கள் மூலம் ஏற்படும் உயிரிழப்பைவிட பத்துமடங்கு அதிகம்! ஐக்கிய நாடுகள் சபை, தண்ணீரின் தரம் குறித்து, நூற்று இருபத்து இரண்டு நாடுகளில் ஆய்வு செய்தபோது, இந்தியாவுக்கு நூற்று இருபதாவது இடம் கிடைத்தது!



* 1980களில் ஒகேனக்கல்லில் பொங்கும் புதுப் புனலாய் காவேரி

'புளோரைடு' உள்ளிட்ட பல்வேறு நச்சுக்களின் பிடியில் சிக்கியிருக்கும் இந்தியாவின் நிலத்தடி நீர், நிலமட்ட நீர் இரண்டையும் அருந்துகிறவர்களே, நோய்வாய்ப்படுபவர்களில் எண்பது சதவிகிதம். உலகமும், இந்தியாவும் இருக்கட்டும். தமிழகத் தண்ணீரின் தரம் எப்படி இருக்கிறது என்று ஒரு சுற்று போய்ப் பார்த்துவிட்டு வரலாமா?

## ஆறுகளைக் காவு கேட்கும் கழிவுகள்!

தமிழகத்தில் மொத்தம் முப்பத்திரண்டு ஆற்றுப் பாசனப் பகுதிகள். பதினொரு பெரிய நீர்த் தேக்கங்கள். இரண்டாயிரத்து அறுநூற்று எழுபத்து ஒன்பது கால்வாய்கள். முப்பத்து எட்டாயிரத்து எண்ணூற்று அறுபத்து மூன்று குளங்கள் மற்றும் ஏரிகள் என்று வனத்துறை கொள்கை அறிக்கை தெரிவிக்கிறது. (சென்னை, நீலகிரி நீங்கலாகக் கணக்கிடப்பட்டவை) இந்தக் குளங்கள் மற்றும் ஏரிகளில் ஐம்பது சதவிகிதம், கன்னியாகுமரி, திருநெல்வேலி, புதுக்கோட்டை, மதுரை, விழுப்புரம், காஞ்சிபுரம் ஆகிய மாவட்டங்களில் மட்டுமே உள்ளன. நகர மயமாதலின் விளைவாக, குளங்களும் தூர்க்கப்பட்டுவிட்டன. ஆறுகளின் நிலை இன்னும் மோசம். வற்றாத ஜீவநதிகள் எதுவும் இல்லாத தமிழகத்தின் உள்நாட்டு ஆறுகள் அனைத்தும் பருவ கால ஆறுகள். மாநிலத்தின் நிலத்தடி நீர் மட்டமோ மேலும் மோசம். அரியானா, பஞ்சாபை அடுத்து நிலத்தடி நீர்வளத்தை அதிகம் உறிஞ்சி எடுக்கும் மாநிலமாக தமிழகம் உள்ளது. இந்தியாவில் நிலத்தடி நீரை எண்பத்தைந்து சதவிகிதம் பயன்படுத்திய ஒன்றியங்கள், முன்னூற்று முப்பத்து எட்டு என்கிறது



ஒன்பதாவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கை. அதில் தொண்ணூற்று ஏழு கருப்பு ஒன்றியங்கள், தமிழகத்தில் உள்ளன. அறுபத்தைந்து முதல் எண்பத்தைந்து சதவிகிதம்வரை உறிந்து தள்ளிய நூற்று தொண்ணூற்று ஒன்பது ஒன்றியங்களும் தமிழகத்தில் உள்ளன.

யார் இந்தத் தண்ணீரையெல்லாம் உறிஞ்சுகிறார்கள்? ஐம்பது சதவிகிதம் விவசாயிகள் என்றால், ஐம்பது சதவிகிதம் தொழிற்சாலைகள். வேலூர், காஞ்சிபுரம் மாவட்டங்களின் குடிநீர் ஆதாரமான பாலாறு, தோலாலைக் கழிவுகளால் வேதிகள் கலந்த நஞ்சாகிவிட்டது. இங்குள்ள தோலாலைகளில் தோலைப் பதப்படுத்தப் பயன்படுத்தப்படும், குரோமியம், குளோரைடு உள்ளிட்ட நாற்பத்தி இரண்டு கொடிய வேதிப்பொருள்கள், தோலாலைக் கழிவு நீர் வழியே வெளியேறி, ஒரு லட்சம் ஹெக்டேர் விவசாய நிலத்தைப் பாழாக்கியதோடு, எண்பத்தாறு சதவிகித நிலத்தடி நீரை உப்பாகவும், நஞ்சாகவும் மாற்றிவிட்டன. திண்டுக்கல், ஆம்பூர், வாணியம்பாடி பகுதி நிலத்தடி நீருக்கும் இதே பரிதாப நிலை ஏற்பட, தோலாலைக் கழிவுகளே காரணம்.



பாலாற்றைக் கெடுத்தது தோலாலைகள் என்றால், கொங்கு மண்டல ஈரோடு, சேலம், கோவை, தருமபுரி மாவட்ட ஆறுகளையும், (பவானி, நொய்யல், அமராவதி) நிலத்தடி நீரையும் மாசுபடுத்திய பெருமை சாயப்பட்டறைகள், செயற்கை நூலாலை (விஸ்கோஸ்) மற்றும் காகிதத் தொழிற்சாலைகளையே சாரும். ஆசியாவிலேயே சிறந்த சுவையான குடிநீரை கோவை மக்களுக்குக் கொடையாகத் தரும் சிறுவாணி அணை கட்டப்பட்டிருப்பது நொய்யல் ஆற்றின் குறுக்கேதான். ஆனால் திருப்பூரில் நொய்யலின் நிலையைப் பார்க்கிற யாரும் சத்தியமாய் இதை நம்ப மறுத்துவிடுவார்கள். மெர்லிப்டன், சல்பைடு, அமைன்கள், குளோரைட், சல்பேட், பாஸ்பேட், நைட்ரேட், அமோனியா உள்ளிட்ட பல்வேறு தொழிலக வேதிகளை பவானி ஆற்றில் கலந்துவிடுவதால், பவானிக்கு 'நஞ்சைச் சுமக்கும் நதி' என்று சுற்றுச்சூழல் போராளிகள் டைட்டில் வழங்கி கண்ணீர் வடிக்கிறார்கள். ஏற்கெனவே வஞ்சிக்கப்பட்ட நிலையில்,



* இருபது குடியிருப்புகள் கொண்ட தொகுப்பு வீடுகளுக்கு வடிவமைக்கப்பட்ட ரிவர்ஸ் ஆஸ்மாசிஸ் வடிகட்டிகள்

நீரோட்டம் குறைந்துவிட்ட காவிரியை கர்நாடக எல்லைக்குள்ளேயே நூற்றுக்கும் அதிகமான தொழிற்சாலைகள் மாசுபடுத்துகின்றன. தமிழகத்தில் நுழையும் காவிரியை, மேட்டூர் தொழிற்பேட்டையின் கழிவுகள், பதம் பார்க்கின்றன.

அங்கிருந்து நஞ்சைச் சுமக்கும் நதியானது பவானியுடன் கூடுதுறையில் கலக்கிறது. பிறகு கரூர் வந்தடையும்போது, சாயப்பட்டறை ஆலைகள், காகிதத் தொழிற்சாலைகள், காவிரியின் கழுத்தை நெறிக்கின்றன. இன்னும் வைகை, தாமிரபரணிக்கும் இதே பரிதாப நிலைதான். நீரோட்டம் குறைதல், தொழிற்பேட்டைகள் மற்றும் தொழிற்சாலைகளால் மோசமாக மாசுபடுதல், போன்ற துயர நிலைகளைச் சந்திக்கும் தமிழக ஆறுகளில் வேறு அகழ்ந்து எடுக்கப்படுகிறது. விளைவு...? நிலத்தடி நீர் மட்டம் அதலபாதாளத்திற்குச் செல்கிறது.




கடற்கரையோரங்களில் நிலத்தடி நீர் கட்டுப்பாடற்று உறிஞ்சப்படுவதாலும், இறால் பண்ணைகளின் கைங்கரியத்தாலும், பெரும்பாலான தமிழக கடற்கரைப் பகுதிகள், உப்பு நீரின் ஊடுருவலுக்கு இலக்காகித் தவிக்கின்றன. இன்று தமிழகத் தண்ணீரின் தரம் பெரும்பாலான மாவட்டங்களில் குடிக்கவும், பயன்படுத்தவும் தகுதியற்றதாக மாறிப் போய்விட்டது.

## தனியார் கையில் தண்ணீர்!

கடந்த நூற்றாண்டில் எண்ணெய்



வளத்திற்கு ஏற்பட்ட போட்டி, இருபத்தோராம் நூற்றாண்டில் தண்ணீருக்காக ஏற்படும். இது சென்ற புவி உச்சி மாநாட்டின் எச்சரிக்கை. ஏற்கெனவே பல நாடுகளுக்கு இடையே தண்ணீர் தாவாக்களும், பங்கீட்டுப் பிரச்னைகளும், பதற்றமான போர்ச் சூழ் நிலையை உருவாக்கியுள்ளன. இந்த அபாயத்தைத் தடுத்து நிறுத்து வதற்காகத் தான், நீர்வளத்தைச் சூறையாடும் பன்னாட்டு நிறுவனங் களுக்குக் கடிவாளம் போட வேண்டும், என சர்வதேச நிலத்தடி நீர் மாநாடு தீர்மானம் போட்டது. ஆனால் பன்னாட்டு நிறுவனங்களின் கூட்டணி இந்தச் சிக்கலுக்கு முன் வைக்கும் தீர்வு, பிரச்னையை மேலும் பயங்கரமாக்கு கிறது. மற்ற நுகர்வுப் பொருள்களைப்போல குடிநீரை விற்பனைப் பொரு ளாக்கி விநியோகம் செய்ய வேண்டும் என்பதுதான், இவர்கள் சொல்லும் தீர்வு. இதற்கு அரசுகளும் செவிசாய்க்கத் தொடங்கிவிட்டன.

தனியார் கையால் தண்ணீர் விநியோகம் என்றதும், ஏதோ பற்றாக் குறைக் காலங்களில் 'லாரி மூலம் சப்ளை செய்வது போன்றதா 'என்று நினைத்துவிடாதீர்கள். மாறாக, குடிநீர் நிரந்தரமாக குழாய் மூலம் விநி யோகிக்கப்படும். குழாயை எவ்வளவு நேரம் திறந்து வைத்திருக்கிறீர்களோ,

அந்த அளவு கட்டணம் வசூலிக்கப்படும். இது குடி நீருக்கு மட்டுமல்ல, நிலத்தடி நீரைப் பயன்படுத்துவதற்கும்தான். பிலிப்பைன்ஸ், தென்னாப்பிரிக்கா நாடுகளில், தனியார் நிறுவனங்கள் இப்படித்தான் நீரை விற்பனை செய்கின்றன. பணம் கட்ட முடியாத இருபத்து இரண்டாயிரம் பேரின் குடிநீர் இணைப்புக்களை, தயவு தாட்சயம் இன்றி இங்கே துண்டித்திருக்கிறார்கள் என்கிறது லேட்டஸ்ட் புள்ளிவிபரம்.

நீர் விநியோகம் தனியாரின் கட்டுப்பாட்டிற்குள் சென்றுவிடுவதால், இந்த நிறுவனங்கள் நீரைக் கையாளும், விநியோகிக்கும் முழு உரிமையைப் பெற்று, அதன் ஏகபோக அதிபர்களாகிவிடுகின்றன. நேற்றைய நிலப் பிரபுக்கள் போல, இன்று நீர்ப் பிரபுக்கள். இந்தியாவில் நிலப் பிரபுக்கள் நிறையவே உள்ளனர். நீர்ப் பிரபுக்கள்?

## இந்திய ஆறுகளில் முதன்முறையாக...

'இந்தியத் தொலைக்காட்சிகளில் முதல் முறையாக' முழக்கத்தை கேட்டிருக்கிறோம். ஆனால் இந்திய ஆறுகளில் முதன்முதலாக, ஏதேனுமொன்று தனியாருக்கு விற்கப்பட்டிருக்கிறதா? ஆம்! என்றால் அதிர்ந்து போவீர்கள். 1996ல் சட்டீஸ்கர், மத்தியப் பிரதேசத்தின் ஒரு பகுதியாக இருந்தது. அப்போது மாநில அரசு, ரியல் எஸ்டேட் அதிபரான கைலாஸ் சோனி என்பவரோடு, ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டது. அதன்படி, அவர் சட்டிஸ்கரில் ஓடும்

• சியோநாத் ஆற்றில் இறக்குமதி செய்யப்பட்ட மோட்டார் படகில் சொகுசு சவாரி செய்யும் கைலாஸ் சோனி



சியோநாத் ஆற்றில் ஓர் அணை கட்டித்தர வேண்டும். அதற்கு ஈடாக, அந்த ஆற்றில் 23.6 கிலோ மீட்டர் தூரம், இருபத்து இரண்டு ஆண்டுகளுக்கு குத்தகைக்கு விட்டுவிட்டது. அன்றையச் சூழ்நிலையில் அது ஒரு சாதாரண ஒப்பந்தம். இன்றோ பல தலைமுறைகளாக அந்த ஆற்றை நம்பி வாழ்ந்த விவசாயிகள், நீரைப் பயன்படுத்த முடியாமல் விவசாயத்தைக் கைவிட்டு விட்டனர். மீனவர்கள் மீன்பிடித் தொழிலை விட்டுவிட்டு, நெசவுத் தொழிலாளர்களாக மாறிவிட்ட னர். முப்பத்தியொன்பது கோடி ரூபாய் செலவில், துர்க்கில் என்ற இடத்தில் அணை கட்டிக் கொடுத்த கைலாஸ் சோனி, தமது 'ரேடியஸ்' நீர் விநியோக நிறுவனம் மூலம், துர்க் நகரின் அருகில் போராய் என்ற தொழிற்பேட்டையில் அமைந்துள்ள, மெகா தொழிற்சாலைகளுக்கு, தண்ணீரை பைப் மூலம் விற்று வருகிறார். இதில் எலெக்ட்ரோ கிராபிக்ஸ் என்ற நிறுவனம் மட்டுமே, மாதம் தோறும் பத்து லட்ச ரூபாயை குடிநீர்க் கட்டணமாக அளிக்கிறது! இருபது ஆண்டுகள் இந்தத் தொழிற்பேட்டைக்கு மட்டும் தண்ணீரை விற்று வந்தால் எவ்வளவு லாபம் கிடைக்கும் தெரியுமா? மயக்கம் போட்டு விடாதீர்கள். வெறும் அறுநூறு கோடி ரூபாய்தான்.

அமெரிக்காவின் 'பீச்டெல்' நிறுவனம், இந்தியத் தொழிலதிபர்களையும் இணைத்துக் கொண்டு வருகிறது. திருப்பூரின் குடிநீரும், கழிவுநீரும், இனி அதன் கையில். பிரெஞ்சு சூயஸ் 'டெக்ரீமவுண்ட்' என்ற பெயரில் டில்லி பெங்களூர், நாக்பூர் நகரங்களின் சில பகுதி தண்ணீர் விநியோகத்தைத் தனது கட்டுப்பாட்டில் எடுத்துக் கொண்டுள்ளது. இங்கிலாந்தின் 'தேம்ஸ் வாட்டர்' இந்தூர் நீர் விநியோகத்தைப் பெற முயற்சிக்கிறது. இப்படி முடிந்த பேரங்களையும், நடைபெறும் பேரங்களையும் சொல்லிக் கொண்டே போகலாம். இதுவரை குழாயில் எளிதாக வந்த தண்ணீர், அயல்நாட்டு வர்த்தகப் பெயரோடு, விற்பனைப் பொருளாக குழாய் வழியே வீடு தேடி வரப் போகிறது. ஆனால் ஏற்கெனவே குடுமிப்பிடி சண்டை போட்டபடி பன்னாட்டு நிறுவனங்கள் தங்களது அடைக்கப்பட்ட குடிநீர் பிராண்டுகளை நம் தலையில் கட்டி வருகின்றன. இவை அத்தனையிலும் பூச்சிக் கொல்லி விஷம் இருப்பதை அறிந்தும், நாம் கடந்த ஆண்டு ஆயிரம் கோடி ரூபாய்க்கு பாட்டில் தண்ணீரை வாங்கிக் குடித்திருக்கிறோம் என்றால் நம்பித்தான் ஆக வேண்டும்.



# அடைக்கப்பட்ட குடிநீர் அபாயம்!



• மெம்பரன்ஸ் - மிக நுண்ணிய வடிகட்டி

2003ஆம் ஆண்டை சர்வதேச நன்னீர் ஆண்டாக உலகமே கொண்டாடிக் கொண்டிருந்தது. ஆனால் கடந்த ஆண்டு பிப்ரவரி மாதம், இந்திய நடுத்தர மேல் தட்டு மக்களை கதிகலங்க வைத்தது ஓர் அறிவிப்பு. புதுடெல்லியை மையமாகக் கொண்டு செயல்படும் 'அறிவியல் சுற்றுச்சூழல் மையம்' (Center for science Environment) இந்தியத் தலைநகரின் பல்வேறு பகுதிகளிலும் கடைகளில் விற்கப்படும் (பன்னாட்டு நிறுவனங்களின் பிரபல பிராண்டுகள் உட்பட) பதினேழு நிறுவனங்களின் தண்ணீர் பாட்டில்களை வாங்கி வந்து, அவற்றின் தரத்தைப் பரிசோதித்தது. சோதனையின் முடிவில் முன்னணி நிறுவனங்களின் அடைக்கப்பட்ட குடிநீரிலேயே 'மாலத்தியான் குளோர்பைரியாய், பிஎச்சி, டிடிடி.' போன்ற கொடிய பூச்சிக் கொல்லி மருந்துகள், அனுமதிக்கப்பட்ட அளவைக் காட்டிலும் எழுபத்தொன்பது மடங்கு அதிகமிருந்ததை அறிவித்தது.

பாட்டில் தண்ணீர் நிறுவனங்கள், தங்களுக்குத் தேவையான தண்ணீரை எங்கோ மேகத்திலிருந்து பெறவில்லை. நமது நிலத்தடி நீரைத்தான் மூலப்பொருளாகப் பயன்படுத்துகிறார்கள். பசுமைப் புரட்சியின் விளைவாக, நிலங்களில் கொட்டப்பட்ட பூச்சிக் கொல்லி மருந்துகள், நிலத்தடியில் தங்கி ஊடுருவி, அங்குள்ள நீரைக் கெடுத்து விட்டன. ஆனால் இவற்றை தூய்மையாக்கித் தரவேண்டிய பாட்டில் தண்ணீர் நிறுவனங்கள், எம்மாதிரியான முறையைப் பின்பற்றுகிறார்கள் என்ற கேள்வி எழுகிறது. தூய்மைப்படுத்துதல் என்பது தண்ணீரை வடிகட்டுவதுதான். குளோரின், குளோராமைன்ஸ், ஓசோன் போன்ற வேதியல் முறைகளைப் பயன்படுத்தி, தண்ணீரில் உள்ள நுண்ணுயிர்களை முதலில் அழிக்கிறார்கள். பிறகு அல்ட்ரா வயலெட் ஒளியைப் பாய்ச்சுவதன் மூலம் பாக்டீரியா, வைரஸ்களை அழிக்கிறார்கள். அடுத்து ரிவர்ஸ் ஆஸ்மாசிஸ் என்ற முறை மூலம், கார்பன் வடிகட்டியில் நீரை வடிகட்டுகிறாகள். மிக நுண்ணிய வடிகட்டிகள் மூலம், எஞ்சிய பாக்டீரியாக்களையும் வடிகட்டுகிறார்கள்.

இத்தனைக்குப் பிறகும் பிரபல பிராண்டு

மினி கல்கி



களில் ஏன் பூச்சிக் கொல்லி? தூய்மைப்படுத்துதல் என்பது ஏதோ ஒப்புக்குச் செய்யப்படுகிறது என்றுதானே அர்த்தம்? இப்போது பாட்டிலில் தண்ணீரை அடைத்து விற்கும் எல்லா நிறுவனங்களுக்கும், ஐ.எஸ்.ஐ. சான்று கட்டாயமாக்கப்பட்டுள்ளது. இதன்படி டாக்சிக் நச்சு, கதிர்வீச்சுப் பொருட்களின் அளவு அனைத்தும் கட்டுப்படுத்தப்பட வேண்டும். அதே நேரம் தண்ணீரில் காணப்படும் பூச்சிக் கொல்லியின் அளவு, கண்டுபிடிக்க முடியாத அளவாக இருக்க வேண்டும். அந்த அளவு என்ன என்பதுதான் எல்லோரது கேள்வியும். இந்தச் சூழ்நிலையில்தான் விஷம் என்று தெரிந்தும் தெரியாமலும், கடந்த ஆண்டு ஆயிரம் கோடி ரூபாய்க்கு பாட்டில் தண்ணீரை வாங்கி அருந்தியிருக்கிறோம். இனியும் ஏன் விஷத் தண்ணீரை விலை கொடுத்து வாங்கிக் குடிக்க வேண்டும்? வீட்டிலேயே மினரல் வாட்டர் தயாரிப்பது ஒன்றும் கம்பசூத்திரம் அல்ல.

## வீட்டிலேயே மினரல் வாட்டர்!

மினரல் தண்ணீர், தூய்மைப்படுத்தப்பட்ட தண்ணீர் இரண்டிற்கும் பெரிய வேறுபாடு உண்டு. கடல் பயணிகள், விளையாட்டு வீரர்கள், உணவுக் கட்டுப்பாட்டை கடைப்பிடிப்பவர்களுக்காக முதன் முதலில் அமெரிக்காவில் அறிமுகப்படுத்தப்பட்டதுதான், மினரல் வாட்டர். அதாவது தூய்மைப்படுத்தப்பட்ட தண்ணீரில், சில சிறப்புச் சத்துகளைச் சேர்த்து தண்ணீரையும் ஓர் உணவுப் பொருளாக விற்று வருகின்றனர். ஆனால் சத்துக்கள் எதையும் சேர்க்காமல், தூய்மைப்படுத்தப்பட்ட தண்ணீரை 'மினரல் வாட்டர்' என்று இந்தியாவில் விற்று வந்த மோசடியை அறிந்து அந்த வார்த்தையைப் பயன்படுத்த அரசு தடை விதித்துவிட்டது. என்றாலும் தூய்மையாக்கப்பட்ட தண்ணீருக்கும் இங்கே மினரல் வாட்டர் என்ற பெயரே நிலைத்துவிட்டது. நாமும் கூட அவ்வாறே அழைப்போம்.

மினரல் தண்ணீர் அல்லது தூய்மையான தண்ணீரை வீட்டிலேயே தயாரிக்க, முதலில் உங்களது நிலத்தடி நீரின் மாதிரிகளை உங்கள் வசிப்பிடத்தின் அருகில் உள்ள அரசு அல்லது தனியார் ஆராய்ச்சி கூடத்திற்கு எடுத்து சென்று, 'கெமிக்க அனாலிசிஸ் டெஸ்ட் செய்ய வேண் டும். இந்தப் ப சோதனையி உங்கள் தண்ணீர



•டேங்க் தண்ணீ யூ.வி. ஒளி பாய்ச்சப்படுகிற

உள்ள இரசாயனங்கள் மற்றும் பூச்சிக் கொல்லிகளின் அளவு தெரிந்து விடும். உங்கள் தண்ணீரில் இரசாயனப் பொருள்களின் அளவு அனுமதிக்கப்பட்ட அளவிலோ அல்லது அதற்குக் குறைவாகவோ இருந்தால், சாண்ட் ஃபில்டர் மட்டும் அமைத்துக் கொண்டால் போதும்.



* பன்னாட்டு பாட்டில் தண்ணீர் - உள்நாட்டுப் பூச்சிக் கொல்லி!

சோதனையில் இரும்புச் சத்து, ப்ளோரைடு, செலினியம் அதிகமிருப்பது தெரியவந்தால், நீங்கள் கார்பன் ஃபில்டர் உள்ளடங்கிய ரிவர்ஸ் ஆஸ்மாசிஸ் வடிகட்டியை அமைத்துக் கொள்வது நல்லது. இவை தவிர, உங்கள் தண்ணீரில் அமோனியா அதிகமிருந்தால், சாக்கடை மற்றும் கழிவு நீரால் பாதிக்கப்பட்டிருக்கிறது என்று அர்த்தம். அமோனியா அதிகமுள்ள தண்ணீரில் கொடிய பாக்டீரியா மற்றும் வைரஸ்கள் நிறைந்திருக்கும் வாய்ப்புகள் அதிகம். இப்போது நுண்ணிய பேக்டீரியாக்களை வடிகட்டுவதற்கென்றே, மெம்ப்ரன்ஸ் வடிகட்டிகள் வந்துவிட்டன.

உங்களது தண்ணீரின் தேவை, பயன்பாடு இவற்றோடு, உங்கள் தண்ணீரில் உள்ள இரசாயனங்களின் அளவைப் பொறுத்து, ஏற்ற நீர் சுத்திகரிப்பு வசதியை, உங்கள் குடிநீர்த் தொட்டிக்கு அருகிலேயே ஏற்படுத்திக் கொள்ளலாம். பத்து அபார்ட்மெண்டுகள் கொண்ட ஒரு குடியிருப்புக்கு, சாண்ட் மற்றும் ஆக்டிவேட்டட் கார்பன்ஃபில்டர் அமைக்க அதிகபட்சம் முப்பதாயிரம் ரூபாய் போதுமானது. பத்து முதல் ஐம்பது குடியிருப்புகள் கொண்ட மெகா குடியிருப்பு எனில், கார்பன் ஃபில்டர், மெம்பரன் ஃபில்டர், யுவி. ஃபில்டர் உள்ளிட்ட ரிவர்ஸ் ஆஸ்மாசிஸ் அமைக்க, அதிகபட்சம் ஒரு லட்ச ரூபாய் செலவு பிடிக்கும். (இந்த சராசரி மதிப்பு குடிநீருக்கு மட்டுமே) ங்கள் தனி வீட்டில் வசிக்கிறீர்கள், அல்லது அதிகபட்சமாய் இரண்டு முதல் மூன்று போர்ஷன்களை வாடகைக்கு விட்டிருக்கிறீர்கள் என்றால், அதிகபட்சம் ரூபாய் த்தாயிரம் செலவில் கார்பன் மற்றும் ஓவி. பில்டர்களை அமைத்துக் கொள்ளலாம். ங்கள் வடிகட்டும் சாதனங்களை வாங்கும் நிறுவனம் ஐஎஸ்ஓ. தரச் சான்று பெற்றதா என்பதை கவனித்து வாங்குங்கள்.

## தவிர்க்க முடியாத தண்ணீர் மேலாண்மை!

வீட்டிலேயே தூய்மையான, பாதுகாப்பான தண்ணீரைத் தயாரிக்க, முதலில் ங்களது நிலத்தடி நீரைப் பாதுகாக்க வேண்டும். இதற்கு நான்கு அம்சங்களை ட்டாயம் பின்பற்ற வேண்டும். நீரைச் சேமிப்பது, சேமித்த நீரை முறையாகப் யன்படுத்துவது, உங்கள் ஆழ்குழாய்க் கிணற்றை ஒட்டிய ற்றுச்சூழல் சுகாதாரத்தைக் காப்பது, உங்கள் டியிருப்புப் பகுதியை ஒட்டிய நீர் ஆதாரங்



கள் மற்றும் நீர்வழிகள் மாசுபடுவதை சகித்துக் கொண்டு போய்விடாமல், அரசு அதிகாரிகள், ஆட்சியாளர்களிடம் பிரச்னைகளை எடுத்துச் செல்வது. பிரச்னை தீர்க்கப்படாத பட்சத்தில், குழுவாக நீதிமன்றம் செல்வது. அரசு சாரா அமைப்புகளின் ஒத்துழைப்பைப் பெற்று பிரச்னையைத் தீர்ப்பது.

நீர் சேமிக்கும் முறைகளில் முக்கியமானது மழைநீர் அறுவடை. உங்கள் நிலத்தடி நீரின் தரத்தையும், அளவையும் உயர்த்தும் மழைநீரைச் சேமிக்கப் போதிய வசதிகளை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். நகரங்களில் பெரும்பாலான வீடுளில் மழைநீர் சேமிப்பு என்பது, தொட்டிகளில் மட்டும் நிறைத்துவிட்டு, எஞ்சிய மழைநீரை சாலையில் திறந்து விடுவது போல் அமைத்திருப்பது, நம்மைநாமே ஏமாற்றிக் கொள்வதாகும். எல்லாத் தேவைகளுக்கும் நேரடியாகத் தண்ணீரை எடுத்துப் பயன்படுத்தாமல், வீட்டில் பயன்படுத்திய சோப்புத் தண்ணீர் முதல் அரிசி கழுவிய தண்ணீர் வரை, அனைத்தையும் ஒரு பிளாஸ்டிக் கண்டெய்னரில் சேமித்து வாசல் தெளிக்க, வாகனங்கள் கழுவ என்று பயன்படுத்தலாம். உங்கள் வீட்டில் ஏசி சாதனம் இருக்குமானால், அதிலிருந்து வெளியேறும் தண்ணீர் தூய்மையானது என்பதால், அதையே கொதிக்க வைத்து குடிநீராகப் பயன்படுத்தலாம்.

மிக மிக முக்கியம், உங்கள் வீட்டின் தண்ணீர்க் குழாய்களில் தண்ணீர் குறைவாகக் கொட்டுவதுபோல் அமைத்துக் கொள்வது. நீங்கள் அமைத்திருப்பது பிளாஸ்டிக் சின்டெக்ஸ் வகை டேங்க் எனில், உள்பகுதியில் ஆண்டுக்கு ஒரு முறை HDP கோட்டிங் பூச வேண்டியது அவசியம். இந்தக் கூடுதல் செலவினத்தைத் தவிர்க்க, சிமெண்ட் டேங்குகளே பாதுகாப்பும், சிக்கனமும் நிறைந்தவை. உங்களது தொட்டிகளிலிருந்து நீர் கசிந்துவிடாமலும், ஆவியாகிவிடாமலும் இருக்க, முழுவதும் செராமிக் தகடுகளை அதில் பதித்துவிடலாம். லாரிகள் மூலம் விலைக்கு வாங்கி, தொட்டிகளில் சேமித்து பயன்படும் தண்ணீரை, உங்களது டேங்கிற்கு நீரேற்றம் செய்து, கார்பன் ஃபில்டர் மூலம் வடிகட்டிப் பயன்படுத்துவதே பாதுகாப்பானது.

## சின்னச் சின்ன செயல்முறைகள்

உங்கள் வீட்டில் தண்ணீர் தூய்மையாக்கும் அமைப்பு இருந்த போதிலும், அவ்வப்போது அடைக்கப்பட்ட குடிநீர் வாங்க வேண்டி வந்தால், பபிள் டாப் கேன்களை





மட்டுமே வாங்கிப் பயன்படுத்துங்கள். மற்ற கேன்களை ஒழுங்காகச் சுத்தம் செய்தார்களா என்பதை நாம் பார்த்துத் தெரிந்து கொள்ள முடியாது. தண்ணீர் பாக்கெட்டுகளைப் பயன்படுத்துவதை அடியோடு தவிருங்கள். இந்த பாக்கெட்டுகளை சீல் வைக்க வெப்பம் பயன்படுத்தப்படும்போது, பாலிதீன் உருகி டை ஆக்ஸின் தண்ணீரில் கலக்கும் வாய்ப்புகள் அதிகம். தண்ணீரின் தூய்மை ஒருபுறம் இருக்க, இது புற்று நோய்க்குக் காரணமாக அமைந்து விடலாம். தூய்மையாக்கப்பட்ட உங்கள் குடிநீரில் கருந்துளசி, வெட்டிவேர் இவற்றில் ஏதாவது ஒன்றை சிறிது போட்டுப் பயன்படுத்தினால் கிருமிகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. வளரும் குழந்தைகளுக்கு ஒருபோதும் பாட்டில் தண்ணீரைக் கொடுத்துப் பழக்காதீர்கள். பிறகு வேறு சுவை கொண்ட தண்ணீரை அவர்கள் ஏற்பது கடினம்.

## தண்ணீர்க் கடமை

தண்ணீர் ஓர் அடிப்படை உரிமை. அதனை ஒவ்வொருவருக்கும் கிடைக்கச் செய்வது மக்கள் நல அரசுகளின் தலையாய கடமை. தண்ணீருக்கான உரிமையை, தண்ணீர் விலையுடன் தொடர்புபடுத்தக் கூடாது. எனவே, குடிநீர் விநியோகத்தை அரசே கையில் வைத்திருக்க வேண்டும். நீர் வளத்துக்கான ஆதாரங்களை அழிவிலிருந்தும், ஆக்கிரமிப்பிலிருந்தும் காப்பது, ஒவ்வொரு துளி மழை நீரையும் சேமிப்பது, என பல கடமைகள் நம்முன் காத்திருக்கின்றன. தண்ணீரைக் காப்போம்! அதுதான் நம் வாழ்வைக் காக்கும். நாம் வாழும் இந்தப் பூமியையும் காக்கும்.

தொகுப்பு : **ஜெயந்தன்**

## ஆடித் திருநாள்

**அமரர் கல்கி**

ஆடிப் பதினெட்டாம் பெருக்கன்று சோழநாட்டு நதிகளிலெல்லாம் வெள்ளம் இரு கரையும் தொட்டுக் கொண்டு ஓடுவது வழக்கம். அந்த நதிகளிலிருந்து தண்ணீர் பெறும் ஏரிகளும் பூரணமாக நிரம்பிக் கரையின் உச்சியைத் தொட்டுக் கொண்டு அலை மோதிக் கொண்டிருப்பது வழக்கம். வடகாவேரி என்று பக்தர்களாலும், கொள்ளிடம் என்று பொது மக்களாலும் வழங்கப்பட்ட நதியிலிருந்து, வடவாற்றின் வழியாகத் தண்ணீர் வந்து வீரநாராயண ஏரியில் பாய்ந்து, அதை ஒரு பொங்குங்கடலாக ஆக்கியிருந்தது. அந்த ஏரியின் எழுபத்து நான்கு கணவாய்களின் வழியாகவும் தண்ணீர் குழுகுழுவென்று பாய்ந்து சுற்றுப் பக்கத்தில் நெடுந்தூரம் நீர் வளத்தை அளித்துக் கொண்டிருந்தது.

அந்த ஏரித் தண்ணீரைக் கொண்டு கண்ணுக்கெட்டிய தூரம் கழனிகளில் உழவும் விரை தெளியும் நடவும் நடந்து கொண்டிருந்தன. உழுது கொண்டிருந்த குடியானவர்களும் நடவு நட்டுக் கொண்டிருந்த குடியான

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05* Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka Supplement to the Kalki issue Dated 16.5.2004



வப் பெண்களும், இனிய இசைகளில் குதூகலமாக அங்கங்கே பாடிக் கொண்டிருந்தார்கள். இதையெல்லாம் கேட்டுக்கொண்டு வந்தியத் தேவன் களைத்திருந்த குதிரையை விரட்டாமல் மெதுவாகவே போய்க் கொண்டிருந்தான். ஏரிக்கரைமீது ஏறியதிலிருந்து அந்த ஏரிக்கு எழுபத்து நான்கு கணவாய்கள் உண்டு என்று சொல்லப் படுவது உண்மைதானா என்று அறிந்து கொள்ளும் நோக்கத்துடன், அவன் கணவாய்களை எண்ணிக் கொண்டே வந்தான். ஏறக்குறைய ஒன்றரைக் காத தூரம் அவன் அந்த மாபெரும் ஏரிக்கரையோடு வந்த பிறகு எழுபது கணவாய்களை எண்ணியிருந்தான்.

ஆகா! இது எவ்வளவு பிரம்மாண்டமான ஏரி! எத்தனை நீளம்! எத்தனை அகலம்! தொண்டை நாட்டில் பல்லவப் பேரரசர்களின் காலத்தில் அமைத்த ஏரிகளையெல்லாம் இந்த ஏரிக்கு முன்னால் சிறிய குளங்குட்டைகள் என்றே சொல்லத் தோன்றும் அல்லவா? வடகாவேரியில் வீணாகச் சென்று கடலில் விழும் தண்ணீரைப் பயன்படுத்துவதற்காக, மதுரை கொண்ட பராந்தகனின் புதல்வர் இளவரசர் இராஜாதித்தர் இந்தக் கடல்போன்ற ஏரியை அமைக்க வேண்டும் என்று எண்ணினாரே? எண்ணி அதைச் செய லிலும் நிறைவேற்றினாரே? அவர் எப்பேர்ப்பட்ட அறிவாளியாக இருந்திருக்க வேண்டும்? வீர பௌருஷத்திலேதான் அவருக்கு இணை வேறு யார்? தக்கோலத்தில் நடந்த போரில் தாமே முன்னிலையில் யானைமீது ஏறி சென்று போராடினார் அல்லவா? போராடிப் பகைவர்களின் வேலை மார்பிலே தாங்கிக் கொண்டு உயிர் நீத்தார் அல்லவா? அதனால் 'யானைமேல் துஞ்சிய தேவர்' என்ற சிறப்புப் பெயர் பெற்று வீர சொர்க்கம் அடைந்தார் அல்லவா

இந்தச் சோழகுலத்து மன்னர்களே அதிசயமானவர்கள் தாம்! அவர்கள் வீரத்தில் எப்படியோ, அப்படியே அறத்திலும் மிக்கவர்கள். அறத்தில் எப்படியோ அப்படியே தெய்வ பக்தியில் சிறந்தவர்கள்.

இப்படியெல்லாம் எண்ணிக்கொண்டு வீரநாராயண ஏரிக் கரையின் தெ கோடிக்கு வந்தியத்தேவன் வந்து சேர்ந்தான். அங்கே வடகாவேரியிலிருந் பிரிந்துவந்த வடவாறு, ஏரியில் வந்து சேரும் காட்சியைக் கண்டான். ஏரி கரையிலிருந்து சிறிது தூரம் வரையில் ஏரியின் உட்புறம் படுகையா அமைந்திருந்தது. வெள்ளம் வந்து மோதும்போது கரைக்குச் சேதம் உண்டாகா மல் இருக்கும் பொருட்டு, அந்தப் படுகையில் கருவேல மரங்களையும் வி மரங்களையும் நட்டு வளர்த்திருந்தார்கள். கரையோரமாக நாணல் அடர்த்தியா வளர்ந்திருந்தது. தென்மேற்குத் திசையிலிருந்து இருபுறமும் ம வரிசையுடன், வடவாற்றின் புது வெள்ளம் வந்து வீரநாராயண ஏரியில் கலக்கும் காட்சி, சற்றுத் தூரத்திலிருந்து பார்க்கும்போ அழகிய வர்ணக் கோலம் போட்டது போல் காணப்பட்டது

- 'பொன்னியின் செல்வன்' நாவலிலிருந்




# காலம் காலமாக தோழியும் வழிகாட்டியும்

12.3.2004
பு. புளியம்பட்டி

அன்புள்ள மங்கையர் மலர் ஆசிரியருக்கு,

பலவருட வாசகி ஆனந்தி எழுதும் கடிதம். நான் என் 13 வயதிலிருந்து தங்களது புத்தகத்தைப் படித்துவருபவள். என் தற்போதைய வயது 30. என் வாழ்க்கைக்குப் பல சரியான முடிவுகளையும் உத்வேகத்தையும் அளித்து வரும் மங்கையர் மலர் என் முதல்மாத சம்பளத்தின் முதல் படி. என் மற்ற செலவுகளைக் குறைத்துக் கொண்டாவது முதலில் மங்கையர் மலரை வாங்கி விடுவேன். அதை மாதம் முழுவதும் அல்லாமல் வருடம் முழுவதும் படித்து வருவது எனக்குப் பிடித்தமான வேலை. என் வாழ்க்கையில் பல பிரச்னைகள். அதையெல்லாம் எதையும் வெளியில் சொல்லி தீர்வைக் கண்டதில்லை. என் மங்கையர் மலர் ஒன்றைப் படித்தே நான் தீர்வு கண்டிருக்கிறேன்.
என் வாழ்க்கையின் ஏற்றங்களுக்கு முதல் காரணம் மங்கையர் மலர் ஒன்றுதான்.
இது வெறும் எழுத்து வடிவம் அல்ல, 100% நிஜம்.

கே. ஆனந்தி

K. Anandi

# மங்கையர் மலர்

**இந்தியாவின் நெ.1 மகளிர் இதழ்**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings, 47-NP, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
mangayarmalar@kalkiweekly.com www.mangayarmalaronline.com

